பவள விழாக் கண்ட

# சுயமரியாதை வீரர்கள்

## வாழ்க்கைக் குறிப்புமலர்





ரியாரியப் பொதுவுடைமைக்கட்சி

பவள விழாக்கண்ட

# சுயமரியாதை வீரர்கள்

## வாழ்க்கைக் குறிப்புமலர்



தொகுப்பு

துதி

நாஞ்சில்

சல்மான் பாரிசு

வெளியீடு

மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சி

5, லால் பேகம் தெரு,

சென்னை-5

14-6-1992 ஞாயிறு அன்று
சென்னையில் நடைபெற்ற
சுயமரியாதை மாநாட்டில்
வெளியிடப்பட்டது

-மா.பெ.பொ.க

★ ★ ★

விலை ரூ.பத்து

# வாழ்க்கைக் குறிப்பு மலர்

## உள்ளடக்கம்

# என் எண்ணம்

சேலம் அ. சித்தய்யன் 7.10.1982இல் 75 ஆண்டுகளை முடித்திருந்தார். அவர் 14.9.84இல் மறைந்து விடுவார் என யாரும் நினைத்திருக்க இடமில்லை.

அவர் பெரியார் சமஉரிமைக் கழக-மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமை கட்சியின் நிறுவனர்களில் முதலாமவர்; நம் சிறந்த முன்னோடி; சீரிய பெரியார் தொண்டர். அவருக்குப் பவளவிழா எடுத்து, பவளவிழா மலர் ஒன்றை வெளியிட 1982-83இல் நான் எண்ணினேன். அதனை சேலம் எம். இராஜு, சீர்காழி மா. முத்துச்சாமி, சேலம் கே.ஏ. பழனிச்சாமி, பி.எஸ். பெருமாள் வரவேற்றனர். ஆனால் அது நிறைவேறவில்லை. அ. சித்தய்யன் அவர்கள் வாழ்ந்த போதே அவரைப் பெருமைப்படுத்தி நாம் மகிழ நினைத்தது கைகூடவில்லை.

அண்மையில் சென்னையில் 22.4.92 இரவு பெரியவர் சு. பூவராகன் அவர்களைக் கண்டு உடல்நலம் உசாவிட வாய்ப்பு நேர்ந்தது. 17.5.92இல் அன்னாருக்கு 90ஆவது ஆண்டு பிறந்தநாள் என அறிந்து வியப்புற்றேன். அன்றும் அன்னாரைப் பார்த்து மகிழ்ச்சியடைந்தேன். சிறந்த சுயமரியாதைச் சுடராக விளங்கும் அவரை, ஒரு 46 ஆண்டுகாலம் பார்க்க-பழக-பேசக் கிடைத்த வாய்ப்பை எண்ணியெண்ணி நான் மகிழ்ந்தேன்.

இப்படி எண்ணற்ற பழம் பெரும் சுயமரியாதை வீரர்கள் எல்லாக் கட்சிகளிலும், அமைப்புகளிலும் இன்று உள்ளனர். இவர்கள் அனைவரும் வாழும் காலத்திலேயே இவர்கள் நடந்து வந்த ஒற்றையடிப் பாதையை-இருண்ட சாலையை-எதிர்கொண்ட துன்பங்களை-கண்ட சாதனைகளை நிரலிட்டு ஒரு நிழற்படக் காட்சிபோல் உருவாக்கி இவர்களை மகிழ்விப்பதும், இவர்கள் மகிழ்வதைக் கண்டு நாம் பெருமைகொள்வதும் தேவை என 22.4.92இல் எண்ணினேன். இந்த என் எண்ணத்தை மா.பெ.பொ.க. தோழர்கள் 17.5.92இல் முழுமனத்துடன் வரவேற்றனர். அதன் விளைவே, இந்த

"பவள விழாக் கண்ட
சுயமரியாதை வீரர்கள்
வாழ்க்கைக் குறிப்புமலர்"

ஒரு பலமாடி வீட்டின் உப்பரிகை நெடுந்தொலைவில் நிற்போர்க்குத் தெரியும். ஆனால் வீட்டின் கடைக்கால்-அடித்தளச் சுவர்கள் எவர்க்கும் புலப்படா. வீட்டை உருவாக்கியவர்களை எவரும் அறிய மாட்டார்.

ஒரு குடும்பம், ஓர் அமைப்பு, ஒரு கட்சி இவற்றின் தன்மையும் இப்படிப்பட்டவையே.

பொதுக்கூட்ட இடத்தைத் துப்புரவு செய்வோர், பந் தர்க்காலை ஊன்றுவோர், மேடை அமைப்போர், அறிக்கை பரப்புவோர், சுவரொட்டி ஒட்டுவோர், போராட முன்வரு வோர், எதிரிகளிடம் உதைபடுவோர், எதிரிகளைப் புறங் காண்போர், சிறை புகுவோர், இவற்றால் துன்பம் ஏற்போர் என உள்ளவர்களே ஓர் இயக்கத்தில் 100க்கு 95 பேர்.

இயக்கத்தில் பொறுப்பு வகிப்போர், மேடையேறி முழங்குவோர், எழுத்துப் பணி புரிவோர், தத்துவ ஆய்வு புரிவோர்-மிகச் சிலரே. உப்பரிகை போல்-எல்லா மக்களின் கண்களுக்கும் இவர்களே தெரிவர். இது ஓர் அவலம். இது ஓர் அவமான நிலை. இது என் எண்ணம்.

இதனை மாற்றிட விரும்பி, பெரியாரின் சுயமரியாதைக் கொள்கைக் கோட்டையின் அடித்தளச் சுவர்களாய்-தூண்களாய்த் திகழ்ந்து நம்மிடையே இன்று வாழ்வோரை, இவர்கள் வாழுங் காலத்திலேயே பெருமைப்படுத்த விரும் பியே நாம் இதனைச் செய்துள்ளோம். இயக்க வேறுபாடு இன்றி, இது, இன்னும் முழுமையான மலராக வெளிவர, இனி முயலுவோம்.

இச் சிறிய மலரில் சு. பூவராகன், நெ.து. சுந்தரவடி வேலு, ஏ.எம். தர்மலிங்கம், இராம. சுப்பய்யா, கா.ந. ஜல நாதன், பி.ஏ. சுப்பராயன், பா. வைரக்கண்ணு, ந. கணபதி, கோ. குழந்தைவேலன், கே. பாலசுப்ரமணியம், க. திருப் பாண்டியன், புலவர் வீர. அரங்கனார், பி.ஏ.கே. பழநிச் சாமி, இரா. லூர்துசாமி, மு. முத்து, த. வேணுகோபால், நோபிள் கே. கோவிந்தராசலு, செங்கம் சி. ஆறுமுகம், மா.ச. இராமசாமி, சி.ஆ. ரங்கசாமி முதலான பெரியோர்களின் குறிப்புகள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

இக்குறிப்புகளைச் செம்மைப்படுத்தி நூலாக அச்சிட உதவிய துதி, நாஞ்சில், சல்மான் பாரிசு ஆகியோர்க்கும் அச்சிட்டுத் தந்த எஸ்யெஸ் பிரிண்ட் அவுஸ் அச்சகத்

தாருக்கும் நன்றி. இச் சிறிய மலரை வெளியிட்டு இவர்களை மகிழ்விப்பதில் நாம் மகிழ்வோம். இவர்களைப் பெருமைப் படுத்துவதால் நாம் பெருமை பெறுவோம். இவர்களின் வாழ்க்கையிலிருந்து நாம் நல்ல பாடங்கள் கற்போம்.

சென்னை
*14.6.1992*

வே. ஆனைமுத்து
அமைப்புச் செயலாளர்
மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சி

# சு. பூவராகன்



பெயர்:
சு. பூவராகன், பி.ஏ.,
பிறந்தநாள்:
*17.5.1903*
பெற்றோர் பெயர்:
திரு.ச. சுவேதாரண்யன்
திருமதி சு. அம்மாளம்மாள்
பிறந்த ஊர்:
நளம்புத்தூர், கருப்பூர் அஞ்சல். வல்லம்படுகை வழி. காட்டு மன்னார்கோயில் வட்டம். தெ.ஆ.மா.

குடும்பப் பின்னணி: வேளாண்மை-குடும்பத்தொழில் தந்தை சுவேதாரண்யம் நெல் அரிசி ஆலை வைத்திருந்தார். தி.சு.பூ. அரசுப் பணியேற்று மாவட்ட ஆவணப் பதிவாள ராக இருந்து ஓய்வு பெற்றார். *(16.5.1958)*

துணைவியார்: திருமதி பூ. ஞானம்பாள்
மக்கட் செல்வம்: 1. திரு நிலவு பூ. கணேசன் B.A.(Hons).,
2. திரு பூ. சோலையப்பன் B.Sc.,(Ag.)
3. Dr.பூ. பழனியப்பன் M.S., F.A.M.S.,
4. திருமதி வை. பூங்கோதை
5. திருமதி ஆ. முல்லையங்கோதை

இவர்தம் பெயரன்கள், பெயர்த்திகள் நல்ல கல்வி பெற்று பலர் நல்ல பதவிகளில் உள்ளனர்.

**சு. பூவராகன் கல்வி மற்றும் தொழில் விவரம்:**

கணிதத்தில் இளங்கலைப் பட்டம் பெற்றவர். பதிவுத்து றையில் மாவட்டப் பதிவாளராக இருந்து ஓய்வு பெற்றவர். *1928*ஆம் ஆண்டு தனது 25–வது வயதில் பெரியாரைச் சந்தித்தது முதல் அவர் கொள்கை வழி நிற்பவர்.

பழகிய தலைவர்கள் மற்றும் பெரியோர்கள்:

(அ)நீதிக்கட்சி:திரு.A.P. பாட்ரோ, பனகல் அரசர், பொப்பிலி அரசர், A.T. பன்னீர்செல்வம், J.N. இராமநாதன், சர். A. இராமசாமி முதலியார், P.T. இராசன், 'சண்டே அப்சர்வர்' பாலசுப்ரமணியம், S. இராமநாதன்

(ஆ) சுயமரியாதை இயக்கத்தில்: தந்தை பெரியார் ஈ.வெ.ரா., புலவர் கீழமாளிகை பொன்னம்பலனார், சாமி சிதம்பர னார், பட்டுக்கோட்டை அழகிரி, திருவாரூர் தங்கராசு, டி.பி. வேதாசலம், குத்தூசி குருசாமி, பாவேந்தர் பாரதிதா சன், காஞ்சி கலியாணசுந்தரம், சிந்தனைச் சிற்பி சிற்றரசு, பேரறிஞர் அண்ணா, ஈ.வெ.கி. சம்பத், ஆ. திராவிட மணி, நடிகவேள் எம்.ஆர். ராதா. ஒ.பி. இராமசாமி ரெட்டியார், கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன், சேலம் அ. சுப்ரமணியம், ஈழத்தடிகள், ஆசைத்தம்பி, சி.வி.எம். அண்ணாமலை, ஏ.பி. ஜனார்த்தனம், ந.வை. இராமசாமி, சி. ஆளவந்தார், கி. வீரமணி, க. அன்பழகன், இரா. நெடுஞ்செழியன், மதியழகன், வே. ஆனைமுத்து, 'விடுதலை' சம்பந்தம், க. இராஜாராம், வை. இராமச்சந்தி ரன், சாந்தானந்தம், சரவணன், மு. கருணாநிதி (கலைஞர்) மன்னை நாராயணசாமி, திருவண்ணாமலை தருமலிங்கம்.

பெரியார் நடத்திய இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் இந்தி எதிர்ப்பு ஊர்வலத்தை சிதம்பரத்தில் வரவேற்று உணவு உறையுள் அளித்து பல எதிர்ப்புக்கிடையில், முஸ்லீம் மசூதி வெளிஅரங்கில் கூட்டம் நடத்தி சாதனை புரிந்தவர்.

'குடியரசு', 'விடுதலை', 'திராவிடநாடு' ஆகிய இயக்க இதழ்களுக்கு ஏஜெண்ட் பெற்றுத் தந்து கொள்கை பரப்ப வழிவகுத்தவர்.

பண்ருட்டியில் பணியாற்றியபோது சேலத்தில் நடந்த சுயமரியாதை மாநாட்டிற்கு சுவரில் மாட்டும் பெரியார் பொம்மைகள் செய்து அனுப்பி வழங்க ஏற்பாடு செய்தார்.

1943இல் சிதம்பரத்தில் அண்ணாவின் 'சந்திரோதயம்' நாடகம் நடத்தினார். மற்றும் பிற்படுத்தப்பட்டோருக்கு விடுதி அமைக்க கலைவாணர், 'நந்தனார்' நாடகம் நடத்தி நிதி சேர்த்துத் தந்தார்.

சுயமரியாதைத் தலைவர்கள், தமிழ்த்துறைத் தலைவர் களை அழைத்து தில்லைத் தமிழ்க் கழகத்தில் உரையாற்ற வைத்தார். 'வன்னியர் வளர்ச்சிக் கழகம்' அமைத்துப் பிற்படுத்தப்பட்டோருக்குக் கல்வி வழங்க ஏற்பாடு செய்தார்.

சு. பூவராகன் பெரியாருடன் நெருங்கிய தொடர்பு கொண்டதற்கு அரசு மேல் அதிகாரிகள் விளக்கங் கோரிய போது, மனஉறுதியோடு 'மற்றவர் சங்கராச்சாரியாரை வணங்கி அறிவுரை பெறுவதுபோல், தமிழினத் தலைவர் பெரியாரைப் பின்பற்றுவதாகத்' தன் நேர் மேல் அதிகாரியி டம் (பார்ப்பனர்) கூறி, விளக்கத்தை அரசிற்கு அனுப்பிய வர். அரசு உரிய நேரத்தில் கொடி அனுப்பாததால், 1947, ஆகஸ்ட் 15இல் விடுதலைக் 'கொடியை'த் தன் அலுவலகத் தில் ஏற்றவில்லை. அந்த நாளை பெரியார் 'துக்கதினம்' என அறிவித்திருந்தார். சார் பதிவாளராகப் பொறுப்பேற்று 22 ஆண்டுகள் அதே பதவியிலிருந்து பிறகு மூன்றாண்டுகள் மாவட்டப் பதிவாளராகப் பொறுப்பில் இருந்து ஓய்வு பெற்றவர்.

இவர் குடும்பத்தினர், சிறப்பாக ஆண் மக்கள் யாவரும் இயக்கத்திற்கு உழைத்தவர்கள். இன்றும் உழைப்பவர்கள். சு. பூவராகன் எந்தவிதக் குறியெதிர்ப்பையும் எதிர்நோக்காது பணியாற்றுபவர் என்று பெரியாரால் பாராட்டப்பட்டவர்.

உண்மை, நேர்மை, பண்பட்ட பண்பு இவரது குணநலன்கள். இவர் சிறந்த தந்தையாகவும், நேர்மையான அலுவலராகவும் இருந்தமையால் இவர் வாழ்வு முறையே மற்றவர்க்கு வழிகாட்டியாகும்.

சென்னை பூ. சோலையப்பன்

பேராசிரியர் ஆர்க்காடு மாசிலாமணி

# தருமலிங்கம்



தந்தை: திரு. ஆர்க்காடு மாசிலாமணி, மைசூர் அரசில் மருத்துவ இயக்குநராகப் பணி புரிந்தார். சென்னையில் மருத்துவப் பட்டப் படிப்பினைப் பெற்றார். கோலாரில் தன் 48ஆம் அகவையில், 1918ஆம் ஆண்டு இன்புளுயன்சா காய்ச்சலில் காலமானார்.

தாய்: திருமதி அகிலாண்டம்மாள், திரு. ஆர்க்காடு மாசிலாமணி தம்பதிகளுக்கு நான்கு புதல்வர்களும், மூன்று புதல்விகளும் உண்டு.

திரு. தர்மலிங்கம் அவர்கள் பெங்களூரில் R.B.A.N.M. உயர்நிலைப் பள்ளியில் பள்ளியிறுதித் தேர்வில் தேர்ச்சி பெற்றார். பின்னர் 1929இல் சூசையப்பர் கல்லூரியில் பி.ஏ.(வரலாறு) பட்டப்படிப்பில் தேர்ச்சியடைந்தார். 1929இல் மைசூர் மாநிலப் பொதுப்பணித் துறையில் தலைமை எழுத்தராக சிக்மகளூர் செயற் பொறியாளர் அலுவலகத்தில் சேர்ந்தார். பின்பு பெங்களூர் "நீர் வழங்கும் பிரிவு"க்குத் தலைமை எழுத்தராக மாற்றப்பட்டு அங்கு 1960ஆம் ஆண்டுவரை தங்கியிருந்தார். அவ்வாண்டிலேயே ஷிமோகா மாவட்டம், கார்கால் ஷராவதிப் பள்ளத்தாக்கு மின் திட்டத்திற்குப் 'பண்டங்கள் வைப்பறை மேலாளராக' மாற்றப்பட்டார்.

1963ஆம் ஆண்டு பணிஓய்வு பெற்றார். பணிஓய்வு பெறுவதற்கு முன்பே 1957ஆம் ஆண்டு பெங்களூர் அரசு சட்டக் கல்லூரியில் சட்டப் படிப்பில் பட்டம் பெற்றார். இதனைத் தொடர்ந்து L.L.M., பட்டத்தினையும் 1960இல் பெல்காம் சட்டக் கல்லூரியில் பெற்றார். 1962ஆம் ஆண்டில் அரசியல் அறிவியலில் எம்.ஏ. பட்டம் பெற்றார்.

1963இல் மைசூர் உயர்நீதி மன்றத்தில் தன்னை ஒரு வழக்குரைஞராகப் பதிவு செய்து கொண்ட பின்னர், அந்த

ஆண்டு சூன் திங்களில் திரு. சகத்குரு இராஜுகாச்சாரியா சட்டக் கல்லூரியில் ஆசிரியராகப் பணிபுரியத் தொடங்கி னார். சட்டக் கல்வி ஆசிரியராக 10 ஆண்டுகள் தொண்டாற் றிய பின்பு, 1979இல் ஹவானூர் சட்டக் கல்லூரியில் சட்டக் கல்விப் பேராசிரியராகப் பணியாற்றத் துவங்கினார்.

1976ஆம் ஆண்டு 'கர்நாடகப் பகுத்தறிவாளர் கழகத்' தினை ஏற்படுத்தி, நிறுவனர் தலைவராக விளங்கினார். 1975 மற்றும் 1976 ஆண்டுகளில் முனைவர் கோவூர் அவர்கள் தமிழ்நாட்டில் பயணத்தினை மேற்கொள்ள திரு ஏ.எம். தருமலிங்கம் ஆவன செய்தார்.

ஆங்கிலத்தினை அலுவல் மொழியாகவும், தொடர்பு மொழியாகவும், நீடிக்கக் கோருவதற்கு, 1978ஆம் ஆண்டில் ''ஆங்கில மொழிச் சார்புத் தேசியக் குழு''வினைத் தோற்று வித்தார். இந்த அமைப்பின் செயலராகவும், பொருளராக வும் தொண்டாற்றினார்.

கர்நாடக மாநிலப் பிற்படுத்தப்டோர் இயக்கத்தின் அமைப்பாளர் என்ற முறையில், கல்வித் துறையிலும், பொது வேலைத் துறைகளிலும், பிற்படுத்தப்பட்ட மக்க ளுக்கு இடஒதுக்கீட்டு உரிமையினைக் கேட்டுப் போராடத் துவங்கினார். 1982ஆம் ஆண்டிலிருந்தே 'மண்டல் குழு பரிந்துரைகளை' அமுல்படுத்துவதற்குப் போராடத் தொடங் கினார். கருநாடக மாநில 'இரண்டாவது பிற்படுத்தப்பட் டோர் குழு'வின் ஓர் உறுப்பினராக நியமனம் செய்யப் பட்டு 1983 முதல் 1986 முடியப் பணியாற்றினார்.

'குறள் நெறி மன்றத்'தின் புரவலராகவும், பகுத்தறிவு, சுயமரியாதை, தமிழ்த் திருமணங்கள் போன்ற பணிகளை ஆற்றுவதற்காக 'திருவள்ளுவர் சங்கத்தின்' நிறுவனர்-தலைவராகவும் திகழ்ந்தார். மேலும் 'மொழிவழிச் சிறுபான் மையினர் முனைப்புக் குழு' உறுப்பினராகவும் இருந்தார். செய்தி ஏடுகளின், மற்றும் பத்திரிக்கைகளின் தற்சார்பு எழுத்தாளராக மிளிர்ந்தார்.

திரு.ஏ.எம். தருமலிங்கம் அவர்கள் கீழ்க்கண்டுள்ள நூல்களை ஆக்கியுள்ளார்.

1. ''தகர்ந்த நம்பிக்கைகள்'' (அல்லது இந்தியாவில் ஜன நாயகம் (1951ஆம் ஆண்டு)
2. பண்டைய உலகில் சுயசிந்தனைகள் (1977)

3. சமூகச் சீர்திருத்தம் (அல்லது) சமுதாயப் புரட்சி (பெரியாரின் பேச்சு ஆங்கில மொழிபெயர்ப்பு 1965).
4. பெரியாரணா (பெரியாரின் பேச்சுகள், எழுத்துகள் அடங்கிய ஆங்கில மொழிபெயர்ப்பு 1975)
5. 'அம்பேத்கரும் மதச்சார்பின்மையும்' (1985)
6. 'சூத்திரர் அடிமைத் தனத்திலிருந்து விடுதலை'' (1985)

இப் பேராசிரியரின் இரு புதல்வர்களான திரு சுபாஷ் பொறியாளராகவும், திரு.சுரேஷ் மருத்துவராகவும், அமெரிக்காவில் பணி புரிகிறார்கள். இவருடைய மகள் திருமதி உஷா ஒரு பொறியாளரின் வாழ்க்கைத் துணைவியராக உள்ளார்.

பேராசிரியர் திரு.ஏ.எம். தருமலிங்கம் அவர்கள் தன் துணைவியாருடன் இருமுறை அமெரிக்காவிற்குப் பயணம் செய்துள்ளார்.

பூ.அ. கொடையரசன்

## காரைக்குடி இராம. சுப்பையா



78 வருஷத்துக்கு முன்னாடி (1908 நவம்பர்) அரிமளம்னு ஒரு கிராமத்தில நான் பொறந்தேன். அப்பா பேரு பழநியப்பன் (செட்டியார்). அம்மா பேரு சிட்டாள் (ஆச்சி). அப்பாவுக்கு ரெண்டு தாரம். முதல் தாரத்துக்கு ரெண்டு பெண்கள் மட்டுந்தான். ரெண்டாம் தாரமான என் அம்மாவுக்கு ரெண்டும் பையன்கள். நானும் என்னோட அண்ணன் அழகப்பனும்.

அரிமளத்திலே, நான் அதிக நாள் இல்லே; 10, 11 வயசு வரைக்குந்தான் அங்கே இருந்தேன். அந்தப் பத்து வருஷத்திலே, ஏட்டுப் பள்ளிக்கூடத்திலே (திண்ணைப் பள்ளிக்கூடம்) நாலஞ்சு வருஷம் படிச்சேன். அப்போவெல்லாம், ஒன்னாவது, ரெண்டாவதுன்னு படிப்பில்லே, எண்சுவடி, கீழ்வாயிலக்கம், மூதுரை, நல்வழி... இப்படிக் கொஞ்ச நாளைக்கு ஒவ்வொன்னா சொல்லிக் குடுப்பாங்க. சுருக்கமாகச் சொன்னா, தமிழும் கணக்குந்தான் படிப்பு!

எனக்குக் கல்யாணம் நடக்கறப்போ, பெரியார் சுயமரியாதைக் கழகம் ஆரம்பிச்சி ரெண்டு, மூணு வருஷம் இருக்கும். அவருக்கு நாடு பூரா எதிர்ப்பு இருந்த நேரம். எந்த ஊர்ல அவரு கூட்டத்துக்குப் போனாலும், கல்லெறி, சோடாபாட்டில் வீச்சு இப்படித்தான். அப்போ, சொ. முருகப்பா, அவரைக் காரைக்குடிக்குக் கூப்பிட்டு ஒரு கூட்டம் போட்டாரு. என்னதான் பேசறார் கேக்கலாம்னு கூட்டத்துக்கு வந்திருந்த எல்லோருக்கும் ஆர்வம். நானும், ரொம்ப ஆர்வமா நின்னுக்கிட்டிருந்தேன். பார்ப்பனர்களைப் பற்றியும், அவுங்களோட தில்லுமுல்லு, பித்தலாட்டம், கடவுள் பேரால நடக்கிற மோசடிகள் அன்னிக்கு அவரு பேசின விஷயங்கள் எல்லாம் என் மனசில பதிஞ்சு போயி, யோசிக்க வச்சிச்சு. உடனடியா சுயமரியாதைக் கழகத்தில உறுப்பினராச் சேந்துட்டேன். அன்னியிலேயிருந்துதான், என்னோட தீவிர அரசியல் ஆரம்பமாச்சு!

1932ன்னு ஞாபகம். காரைக்குடியில் இராமநாதபுர மாவட்ட சுயமரியாதைக் கழக மாநாட்டை நானும் நண்பர் களும் கூட்ட ஏற்பாடு செய்தோம். இந்த மாநாடுதான், முதன் முதலா ஒரு செயலில் எறங்கி நம்மாலேயும் காரியம் செய்ய முடியும்ங்கிற தைரியத்தை எனக்குக் கொடுத்தது.

வெறுமனே கூட்டங்கள் நடத்துறதுதான்னு இல்லே. பெரியாரும், நாங்களும் அப்பவே பல கலப்புத் திருமணங் கள், விதவைத் திருமணங்கள் எல்லாம் நடத்தி வச்சிருக் கோம். உறையூர் சா.ம. பரமசிவம், இந்த மாதிரி விஷயங்க ளுக்காகவே ''தமிழ்நாடு புரோகித மறுப்புச் சங்கம்''ன்னு ஒண்ணு வச்சிருந்தார். எஸ்.வி. லிங்கம் ரொம்ப வேடிக்கை யாப் பேசுவார்; மனசில ஒன்னும் வச்சுக்க மாட்டார். எதையும் பட்டுன்னு முகத்துக்கு நேரே சொல்லிடுவார்.

'சுப்பிரமணியத் துதியமுது' எல்லாம் பாடிக்கிட்டு பக்திமானா இருந்த கனகசுப்புரத்தினம்கிற பாவேந்தர் பாரதிதாசனும், ஏறத்தாழ நான் கட்சிக்கு வந்த அதே காலகட்டத்திலேதான், பெரியாரோட பேச்சைக் கேட்டு மனசு மாறிக் கட்சி உறுப்பினரானார்.

1937 டிசம்பர்

ராஜாஜியின் ஆட்சியிலே தமிழ்நாடு பூரா 'முதல் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி' நடந்துக்கிட்டிருந்தது. குலக் கல்வித் திட்டத்தை எதிர்த்தும், இந்தித் திணிப்பை எதிர்த்தும், ராஜாஜி ஆட்சிக் காலத்தில் ரெண்டு பெரிய போராட்டங் களை தமிழகம் சந்தித்தது. இந்தி எதிர்ப்புப் போராட்டம் ஆரம்பிச்ச நேரத்திலேயே காரைக்குடியிலே கூட்டம் போடற வேலைகளைத் தொடங்கிட்டோம்.

திராவிடர் கழகம் ஆரம்பிச்ச புதுசுல, நாங்க முக்கியமா செய்த வேலை, இளைஞர்களை எங்கப் பக்கம் இழுக்கறது தான். ஊருக்குப் பெரிய மனுசனுங்களை, வயசானவங் களையாப் பாத்து மரியாதை கொடுத்துக்கிட்டிருந்தது காங்கி ரஸ் கட்சி.

தி.மு.க.வின் தொடக்க காலத்திலே, காரைக்குடியில் என்னோட உறுதுணையா நின்னு வேலை பாத்தவர்கள்லே கருப்புசாமியும், சிவநேசபாண்டியனும், விஜயதேனு விலாஸ் அப்பண்ணசாமி, அவரு பையன் பாண்டியன் எல்லாம் முக்கியமானவங்க. இன்னும் பல பேரும் என் னோட ஓடியாடி வேலை பாத்திருக்காங்க.

1957இல் காரைக்குடியில், தி.மு.கழகம் சார்பாக நான் வேட்புமனு தாக்கல் செய்திட்டேன். ஆனால் ராஜாவை எதித்துப் போட்டியிடனும்னு கண்ணதாசனுக்கு ஆசை இருந்திருக்கு. அண்ணா, தன் முடிவை மாத்திக்கலே. தமிழ்நாடு பூராவுக்குமா 15 பேரு, நம்ம கட்சி ஆளுங்க ஜெயிச்சாங்க. முதல் முறையா தேர்தலைச் சந்தித்த கட்சிக்கு 15 எம்.எல்.ஏ. கெடைச்சதும் பெரிய வெற்றிதானே!

புண்ணாப் போன மனசுக்கு ஆறுதலா, கலைஞர் முதலமைச்சர் ஆனார். அண்ணாவோட கழகம் முடிஞ்சு துன்னு சொன்னவங்களெல்லாம், மூக்கிலே விரலை வைக் கிற மாதிரி ஆட்சி நடத்தினார். மறுபடியும் 1971இல் தேர்தல் வந்தது. ராஜாஜி, காமராஜர் எல்லாரும் ஒன்னா எதிரணி யிலே நின்னபோதுகூட, கலைஞர் பெற்ற பெருவெற்றி நாடறிஞ்சதுதானே.

அதற்குப் பிறகு, 1972லே, என்னை ஒரு பெரிய வியப்புக்குள்ளாக்கினார், கலைஞர். நானும் விசாலாட்சியும் அந்தச் சமயத்திலே, எங்க ரெண்டாவது பையன் செல்வ மணி வீட்டுலே, பட்டினப்பாக்கத்திலே தங்கியிருந்தோம். கட்சியிலே உள்ளவங்களோ, நானோ கூட எதிர்பாக்காத விஷயத்தைக் கலைஞர் செய்தார். கவர்னரிடம் சிபாரிசு செய்து என்னை சட்டமன்ற மேலவை உறுப்பினரா (எம்.எல்.சி) நியமனம் செய்தார்.

ஒரு இராம. சுப்பையாவின் அனுபவங்கள் இன்னும் ஓராயிரம் இராம. சுப்பையாக்களுக்குப் பயன்படனும்கிறது தான் என் ஆசை.

சுயமரியாதை, பகுத்தறிவு, சமதர்மம் ஆகிய கொள்கை களிலே நான்-

இதுவரைக்கும் உறுதியா இருந்தேன்.
இன்னிக்கும் இருக்கேன்.
கடைசி வரைக்கும் இருப்பேன்.

தொகுப்பு: சல்மான் பாரிசு

# நெ.து. சுந்தரவடிவேலு



கல்வித் தந்தை நெ.து. சுந்தரவடிவேலு அவர்கள் காஞ்சிபுரத்திற்குக் கிழக்கே உள்ள நெய்யாடுபாக்கம் என்னும் சிற்றூரில் திருமதி சாரதாம்பாள் நெ.ச. துரைசாமி ஆகியோருக்கு மூத்த மகனாக 1912ஆம் ஆண்டு அக்டோபர் 12ஆம் நாள் பிறந்தார்.

நெ.து.சு.வின் தந்தை தன்மான இயக்கத்தில் ஈடுபாடு கொண்டவர். உயர்சாதியாகக் கருதப்பட்ட, சிவபெருமானின் சடைமுடியிலிருந்து தோன்றியதாகக் கூறிக்கொள்ளும் கொண்டைகட்டி வேளாளர் குடியில் பிறந்த நெ.து.சுவும் அவரது தாயும் ஊர்த்திருவிழாவிற்குச் சென்றனர். பார்ப்பனர் ஒருவர் இனிப்புக்கடை வைத்திருந்தார். தன் தாயுடன் சென்ற நெ.து.சு. சர்க்கரைப்பாகு பூசிய இனிப்பு 'சேவு' வேண்டுமென்று அதைத் தொட்டுக் காட்டினார். சிறுவன் சுந்தரவடிவேலு தொட்டதால் அத்தனைப் பலகாரமும் தீட்டுப்பட்டுவிட்டதாக அந்தப் பார்ப்பனர் கடுஞ்சொற்களையும் சுடுசொற்களையும் அவர் தாயின்மீது வீசினார். அவரது தாய் தன் மகன் தொட்டதால் தீட்டுப்பட்ட இனிப்பு முழுவதையும் தானே விலை கொடுத்து வாங்கி விடுவதாகக் கூறிய பின்னரும் பணிவுடன் மன்னிப்புக் கேட்ட பின்னரும், பார்ப்பனரின் கடுஞ்சீற்றம் நின்றபாடில்லை. இதைப் பார்த்துக் கொண்டிருந்த அவ்வூர் குடியானவர் அந்தப் பார்ப்பனனை ஏகவசனத்தில் திட்டி. பின்னர் பார்ப்பனர் மன்னிப்புக் கேட்கும் நிலைக்கு ஆளானார். பார்ப்பனரை உயர்ந்தவராக ஏற்றுக் கொள்ள முடியாத நாம் ஆதிதிராவிடனர ஏன் தாழ்ந்தவனாகக் கருத வேண்டும் என்ற சிந்தனைத் தெளிவு நெ.து.சு.வுக்கு ஏற்பட்டது.

பின்னாளில் சாதி தாண்டி சமுதாயத்தினரின்-வீட்டாரின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் இசைவேளாளர் குடியில் பிறந்த காந்தம்மாவைத் திருமணம் செய்து கொண்டார்.

இதன் விளைவாக 17 ஆண்டுகளுக்குப் பிறகும் இவரது தாய் இவரது முகத்தைப் பார்க்காமலேயே இறந்து போனார். இவரது தாய் இறந்து உடல் எரியூட்டப்பட்ட பிறகே இவருக்குச் செய்தி சொல்லப்பட்டது.

உள்ளூர் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் இவர் இரண்டு ஆண்டுகள் படித்தார். பின்னர் காஞ்சியிலே எஞ்சிய பள்ளிப் படிப்பை முடித்தார். இவர் மாநிலக் கல்லூரியில் படிக்கும்போது 'வனமலர்ச் சங்கம்' என்று ஒன்று இயங்கியது. இது மக்கள் சமரசம், தமிழ்மொழி பேணல், கிராம அபிவிருத்தி, கலப்புத் திருமணம் ஆகியவற்றைக் குறிக்கோளாகக் கொண்டது. இதில் நெ.து.சு. உறுப்பினரானார்.

1929ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 17, 18 தேதிகளில் செங்கல்பட்டில் முதல் சுயமரியாதை மாநாட்டில் நெ.து.சு. பிரதிநிதியாகவே கலந்து கொண்டார். சமபந்தி உணவு உண்டார். செங்கல்பட்டு மாநாட்டு உரைகளைக் கேட்டு எழுச்சி பெற்றார். 1930இல் மே திங்கள் 10, 11 தேதிகளில் ஈரோட்டில் நடந்த இரண்டாவது சுயமரியாதை மாநாட்டில் கலந்துகொண்டார். சமபந்தி உணவுண்டார். அப்பொழுது தான் பெரியாரை முதன்முதலாக நேரில் பார்த்து உரையாடினார்.

எம்.ஏ. பட்டம் பெற்றபின் 'தமிழ்நாடு' பத்திரிக்கை துணை ஆசிரியராக மாதம் 35 ரூபாய் சம்பளத்திற்குச் சேர்ந்தார். பெரியார் இவரை மாதம் 50 ரூபாய் சம்பளத்திற்குத் தன்னிடம் வேலை பார்க்க அழைத்தார். பெரியாரைத் தலைவராகவும் குருவாகவும் வழிகாட்டியாகவும் ஏற்றுக் கொண்டிருக்கிறேன். தலைவர்-தொண்டர் உறவை 'முதலாளி-அலுவலர் உறவு' பாழாக்கிவிடும் என்று சொல்லி மறுத்துவிட்டார்.

திருவாரூரில் 16ஆவது நீதிக்கட்சி மாகாண மாநாடு 1940ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 3, 4 தேதிகளில் நடந்தது. அதில் கலந்து கொண்டார்.

25.10.1940 வெள்ளிக்கிழமை 10 மணிக்கு மேல் நெ.து. சுந்தரவடிவேலு M.A.L.T.,க்கும், டி.எஸ். காந்தம்மாள் B.Sc.(Hons) M.Sc.க்கும் சென்னை மாவட்டப் பதிவாளர் அலுவலகத்தில் பதிவுத் திருமணம் நடந்தது. குஞ்சிதம், குருசாமி, ஈ.வெ. கிருஷ்ணசாமி, பெரியார், பொன்னம்

பலனார், லிங்கம் மற்றும் சிலர் இருந்து திருமணத்தை நடத்தி வைத்தனர். தாலிகட்டுதல், மாலை மாற்றுதல்கூட இல்லாமல் சிக்கனமாகவும் சீர்திருத்தமாகவும் திருமணம் நடைபெற்றது.

கல்வித்துறையில் இளந்துணைப் பள்ளி ஆய்வாளராகத் தொடங்கி சென்னைப் பல்கலைக் கழகத் துணை வேந்தராக உயர்ந்தார்.

நெ.து.சு., காந்தம் தம்பதிகளுக்கு ஒரு பெண் மகவு பிறந்து இறந்தது. 1949இல் திருவள்ளுவன் என்னும் மகன் பிறந்தான். அவன் 1959இல் மறைந்தான். நெ.து.சு.வின் துணைவியார் 1984இல் இயற்கை எய்தினார்.

பகல் உணவுத் திட்டம், இலவசச் சீருடைக் கொடை, பள்ளிச் சீரமைப்பு இயக்கம் போன்றவற்றை நடைமுறைப் படுத்துவதில் முதலமைச்சர் காமராசருக்குப் பெருந்துணை யாக இருந்தார். உலக நாடுகள் பலவற்றிற்கும் சென்று வந்தவர். எளிய அழகு தமிழில் எழுதும் ஆற்றல் பெற்றவர். சிறு குழந்தைகளும் இவரது எழுத்தைப் புரிந்துகொள்ளும். ஆங்கிலம், தமிழ் இரண்டிலும் சரளமாகப் பேசும் வன்மை வாய்ந்தவர். தம்பி மகன் லெனின்-மருமகள் விஜயா தம்பதிகள் இவருக்கு உறுதுணையாக இருந்து இவரது தேவைகளைக் கவனித்து வருகிறார்கள்.

இன்றும் 'பகுத்தறிவு சமதர்ம இயக்கத்தின் துணைத் தலைவராகவும் 'அறிவுவழி' மாத ஏட்டின் சிறப்பாசிரியராக வும் இருந்து வருகிறார்.

தொகுப்பு:
கோவி ராமலிங்கம்

# சீர்காழி பா.வைரக்கண்ணு



அன்று தஞ்சை மாவட்டம் மயிலாடுதுறை வட்டமாக இருந்து, இன்று நாகை காயிதேமில்லத் மாவட்டம் தரங்கம்பாடி வட்டத்தைச் சேர்ந்த பெருமுளை என்ற திருவிளையாட்டம் கிராமத்தில் கமலம், பாவாடை தம்பதிகளுக்கு ஏழாவது பிள்ளையாக பிரமாதீச வருடம் புரட்டாசி மாதம் கடைசி சனிக்கிழமை (என் தந்தை நான் பிறந்த குறிப்பை இப்படித்தான் ஓலைச்சுவடியில் (தேதி நேரம் எல்லாம் நினைவு இல்லை) எழுதிவைத்துள்ளார்) அதாவது 1912ம் வருடம் அக்டோபர் மாதம் 15ம் தேதி நான் பிறந்தேன். உள்ளூரில் உள்ள பள்ளியில் அய்ந்தாவது வரையில் படிக்க வைத்தார்கள். என் பள்ளியில் அன்று ஒரே ஆசிரியர்; அவரும் பார்ப்பனரே. அய்ந்தாவது வரை உள்ள பள்ளிக்கூடம் அன்று நீதிக்கட்சியில் இருந்த தோழர் சவுரிராசன் அவர்கள் தந்தை ஆதிமூலம் பிள்ளை அவர்களால் துவக்கப்பட்டது. சவுரிராசன் அவர்கள் எனக்குப் பல வருடங்கள் மூத்தவர். அவர் எப்போதாவது பள்ளிக்கூடம் வருவார்; நெற்றி முழுவதும் அடைத்துப் பட்டையாக நாமம் போட்டிருப்பார். நாங்களெல்லாம் அப்பளாக்குடுமி தான் வைத்துக் கொண்டுபோவோம்; மேலே சட்டை கிடையாது; ஒரு துண்டைத்தான் கட்டிக் கொண்டுபோவோம். என் தந்தை எங்களை எல்லாம் படிக்க வைப்பதில் அக்கறையாகவும் கண்டிப்பாகவும் இருப்பார். தந்தை வண்டிமாடு வைத்து நெல் வணிகர்களுக்கு மூட்டை ஏற்றி வாடகை வாங்கி வருவார்.

என்மூத்த அண்ணன்மார்கள் நால்வர் மதுரையில் போய் வேலை செய்து வந்த காரணத்தால் நானும் மதுரை செல்ல விரும்பி அண்ணனோடு மதுரை சென்று பிறகு சமையல் பழகி நான் மட்டும் சமையல் செய்து எல்லோரும் சாப்பிட்டு வந்தோம். அப்போது என்னைப் போன்ற சிறுவர்களுக்கு ஆர்.வி.மில்லில் பாதிநேர வேலையாக

அய்ந்து மணிநேர வேலை கொடுப்பார்கள். மாத சம்பளம் ஆறுரூபாய். அந்த வேலையில் நான் சுமார் 1 வருடகாலம் வேலை பார்த்துவிட்டுப் பின் ஊருக்கு வந்துவிட்டேன்.

பிறகு எங்களூரில் தென்னாப்பிரிக்கா சென்று திரும்பி வந்து மளிகைக்கடை நடத்தி வந்த நாராயணசாமி நாயுடு கடையில் எல்லாவித வியாபாரமும், பண்ணையும் உண்டு. அவர் கடையில் எல்லா வேலைகளையும் செய்யவேண்டும். காலை 6 மணிக்குப் போய் இரவு 11 மணிக்குத்தான் வீட்டுக்கு வரவேண்டும். சம்பளம் முதல் மாதம் ரூ.2.00, மறுமாதம் மூன்று, அடுத்த மாதம் ரூ.4.00ம், புதுவருட சித்திரை முதல் அய்ந்தும் மறுவருடம் ரூ.6.00ம் கொடுத்தார்கள். அப்போது என் முதலாளி "குடியரசு" பத்திரிக்கை வரவழைத்துப் படிப்பார். ஓய்வு கிடைக்கும் நேரமெல்லாம் நானும் "குடியரசு" படிப்பேன். அப்போதே என் மனத்தில் சுயமரியாதைக் கொள்கைப் பிடிப்பு தொடங்கியது.

கடை வேலை அதிகத்தாலும் வேலையில் சலிப்பு ஏற்பட்டதாலும் வேலைக்கு இருந்த கணக்கு பிள்ளையை நிறுத்திவிட்டதாலும் நான் மீண்டும் மதுரை போக விரும்பி வீட்டில் சொல்லாமல் மதுரை போய்ச்சேர்ந்தேன். ஏற்கனவே மதுரையில் பழக்கமானவர்கள் மூலமாக மீண்டும் ஆர்.வி. மில்லில் வேலைக்குச் சேர்ந்துவிட்டேன்.

ஒருநாள் மதுரையில் நடந்த காங்கிரஸ் கூட்டத்தில் வேதாரண்யம் உப்பு சத்யாகிரகத்திற்கு திருச்சியிலிருந்து திரு.இராசகோபாலாச்சாரியின் தலைமையில் 100 தொண்டர்கள் போயிருப்பதை அறிந்து, அடுத்த குழுவில் நானும் போகத் திட்டமிட்டு என் அண்ணனிடம், சொல்லாமல் திருச்சிக்கு வந்து, காங்கிரஸ் ஆபிஸில் சேர்ந்தேன்.

அப்போது என்ன காரணத்தினாலோ கடுமையான சுரம் ஏற்பட்டதனால் காங்கிரஸ் ஆபிஸில் இருந்தவர்கள் என்னைச் சொந்த ஊரான திருவிளையாட்டம் செல்ல செம்பனார் கோவிலுக்கு ரயில் டிக்கட் வாங்கி அனுப்பி விட்டார்கள்.

நான் சொந்த ஊர் வந்து சுமார் 1 மாதம் கழித்து என் அண்ணன் மாணிக்கம் கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டு 6 மாதம் சிறை தண்டனையில் இருப்பதாகக் கடிதம் வந்தது.

பிறகு எங்கள் குடும்பத்தோடு இணைந்தும் தனித்து இருந்தும் வந்த நேரத்தில் தந்தையார் இறந்தும் மறு வருடத்திற்குள் தாயார் இறந்தும் என் குடும்பத்தார் ஏற்பாட்டின் படி என் தாயார் சொல்லிச் சென்ற பெண்ணையே திருமணம் செய்து 6 குழந்தைக்கு தகப்பனாகினேன். சிறுதொழில் செய்து வாழ்க்கையில் சிரமம் ஏற்பட்டதால் 1960ம் வருடவாக்கில் சீர்காழிக்கு வந்து இருந்த காலத்தில் தோழர் மா.முத்துசாமியினுடைய தொடர்பு ஏற்பட்டதின் பயனாக, மறுபடியும் திராவிடர் கழகத்தில் சேர்ந்து சீர்காழி போஸ்டாபீஸ் மறியல் போராட்டம், தென் திருப்பதி என்ற சீயாளத்தில் தென் திருப்பதி சாமியாரை எதிர்த்துத் தொடர் ஆர்பாட்டம் நடத்தியும், தோழர் திருவாரூர் கே.தங்கராசு அவர்களை அழைத்துக் கண்டனக் கூட்டம் நடத்தியும் தென் திருப்பதி கோவில் உருவாகாமல் இருப்பதற்கு திராவிடர் கழகம் நடத்திய போராட்டத்தில் முழுமையாகக் கலந்து கொண்டேன்.

1944 வாக்கில் திருவிளையாட்டம் சவுரிராசன், பெரியார், மணியம்மை, பட்டுக்கோட்டை அழகிரி மூவரையும் அழைத்துப் பொதுக்கூட்டம் நடத்தினார். முதன்முதலாக பெரியாரை அப்பொழுது தான் பார்த்தேன். அவருடைய பேச்சையும் கேட்டேன். அவர் சொன்னது பசுமரத்தாணி போல் முழுமையாக மனத்தில் பதிந்துவிட்டது. 1963 வரையிலும் ஒரு கொள்கைக்காரனாக இருந்தேனே ஒழிய கட்சியில் ஈடுபாடில்லை. 1963க்கு பின் தோழர் முத்துசாமியோடு கட்சியில் முழு ஈடுபாட்டுடன் அவருக்குத் துணையாக இருந்தேன். பெரியார் மறைவுக்குப்பின் தோழர் வே.ஆனைமுத்து தொடர்பு ஏற்பட்டது. அவருடைய வழிகாட்டுதலே பெரியார் கொள்கை வெற்றிபெறுவதற்குச் சிறந்த வழி என்பதை "சிந்தனையாளன்" பத்திரிக்கை படித்து உணர்ந்த காரணத்தினால், அவருடைய வழியில் தொடர்ந்து செயலாற்றிக் கொண்டிருக்கிறேன். என்னுடைய பிள்ளைகளுக்கெல்லாம் சுய மரியாதைத் திருமணந்தான் செய்தேன். என் துணைவியார் மரணமடைந்தபோதுகூட எந்தவித மதச்சடங்குகளும் செய்யவில்லை. என் பையன்கள் மூவரில் நடுப்பையன் அருண்மொழி மயிலாடுதுறை ஒன்றிய மார்க்சிய பெரியாரியப் பொதுஉடமைக் கட்சியின் செயலாளராகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார். சின்னப் பையன் கணபதி சுயமரியாதைத் திருமணம் செய்து

கொண்டு கொள்கைக்காரராக வாழ்ந்து கொண்டிருக்கிறார். பெரிய பையன் தயாளன் சுயமரியாதைத் திருமணம் செய்து கொண்டாலும் எங்கள் தொடர்பில்லாமல் கிருஸ்துவ மத நம்பிக்கையாளனாக வாழ்ந்துகொண்டிருக்கிறார். என்னு டைய கழகப் பணியைப் பாராட்டி 9-3-1980ல் வேலூரில் நடந்த கட்சி மாநாட்டில் எனக்குப் பாராட்டுப் பத்திரம் அளித்துள்ளார்கள். மா.பெ.பொ. கட்சி நடத்திய போராட் டங்களிலெல்லாம் கலந்து சிறை சென்றுள்ளேன்.

"சிந்தனையாளன்", மற்றும் கட்சிப் புத்தகங்கள், சுயமரியாதை இயக்க வெளியீடுகள் வாங்கிப் படிப்பதும் மற்றவர்களுக்குப் படிக்கக் கொடுப்பதும், அதன்படி நடக் கத் தூண்டுவதும் என்னுடைய பணியாகத் தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறேன்.

கட்சி நடத்த இருக்கும் உச்சக்கட்டப் போராட்டங்கள் எதுவாகயிருந்தாலும் அதில் ஈடுபட்டு என்னை அர்ப்பணித் துக் கொள்ளத்தயாராகயிருக்கிறேன்.

நம் கட்சித் தோழர்களோ அல்லது முற்போக்குச் சிந்தனையாளர்களோ சொந்தவீடோ அல்லது இடமோ இருப்பின் அதில் ஒருபகுதியைப் படிப்பகத்திற்கு என்று ஒதுக்கி வைப்பது என்பது - அதாவது மதவாதிகளுக்குக் கோவில்கள் எவ்வளவு முக்கியமோ அதுமாதிரி, நம் மக்கள் அறிவுபெற இதனால் வாய்ப்பு ஏற்படும் என்பது என் எண்ணம்.

இன்னும், பெண்களுக்குத் திருமணம் என்ற கட்டும் இருக்கக்கூடாது என்பதும், உடையிலும்கூட - ஆண் பெண் வேற்றுமைகூடாது என்பதும் என் எண்ணங்கள்.

பா.வைரக்கண்ணு
மா.பெ.பொ.கட்சி
சீர்காழி

## தக்கோலம் கா.ந. ஜலநாதன்



என் பெயர்:
கா.ந. ஜலநாதன்

என் பிறந்த நாள்:
சித்திரை 1ம் நாள், 1913ஆம் ஆண்டு

நான் பிறந்த ஊர்:
தக்கோலம், வடஆர்க்காடு (அம்பேத்கர்) மாவட்டம்

பெற்றோர் : காளத்தி. நடேச முதலியார் (நீலாவதி)

தக்கோலத்தில் விரல்விட்டு எண்ணக்கூடிய சில பெரிய குடும்பங்களில் முக்கியமாக எங்கள் குடும்பம் இருந்து, காலப்போக்கில் பொருளாதாரத்தில் நலிவு ஏற்பட்டதுடன் பங்காளிகள் பாகத்தில் மேலும் சிதைந்தது.

தற்போது நெசவு செய்து வருகிறோம். எனக்கு 4 மகன்கள்; என் மனைவி பெயர் அமிர்தவல்லி, அவர் காலமாகிவிட்டார். நான் 4-ம் வகுப்பு வரை படித்துள்ளேன்.

எனது 4 மகன்களில் 3 பேருக்குத் திருமணம் நடந்துவிட்டது. கடைசி மகனுக்குத் திருமணம் ஆகவில்லை.

பெரியார் இயக்கத்தில் நான் சேரக்காரணமானவர் தக்கோலம் காளி.கு. அண்ணாமலை என்பவராவார்.

இவர் சிறந்த படிப்பாளி. மார்க்சியம்-தர்க்கம்-இலக்கியம், இலக்கணம் ஆகிய அனைத்துத் துறைகளிலும் வல்லவர்.

இவர் எனது அண்ணார் கா.ந.விநாயகம் அவர்களிடம் புராண, இதிகாசங்களைப் பற்றி அக்குவேறு ஆணிவேறு ஆக அலசிப்பேசிக் கொண்டேயிருப்பார்.

இதை நான் எனது வாலிப வயதில் கேட்டுக்கேட்டுச் சிந்தித்து நம் உண்மை நிலையை உணர்ந்தேன்.

பிறகு, நெற்றியில் குறிவைப்பதை நிறுத்திக் கொண் டேன். எனது திருமணம் 14-2-44-ஆம் ஆண்டு நடந்தது. அந்தத் திருமணத்திற்காக அழைக்க வேண்டிப் பெரியார் அவர்களை, 1-4-44-ல் சந்தித்தேன்.

பெரியாரைப் பார்க்க எங்கள் ஊர் நீதிக்கட்சித் தலைவர் திரு. ஜஸ்டிஸ். ஏ.ஆர். செல்லப்பா என்பவர் மூலம் கடிதம் கொண்டு சென்று பெரியாரைப் பார்த்து என் திருமணத்திற்கு அழைத்தேன்.

அவரும் வருவதாக ஒப்புக் கொண்டார். பிறகு அவருக்கு உடல்நிலை சரியில்லாமல் வரவில்லை. அவருக் குப் பதிலாக, அறிஞர் சி.என். அண்ணாதுரை அவர்கள் தலைமை ஏற்று என் திருமணத்தை நடத்திவைத்தார்.

வடஆர்க்காடு மாவட்ட சுயமரியாதை இயக்கத் தலை வர் பெருமாள் மற்றும் செயலாளர் கோபால் ஆகியோருட னும் மற்றும் ஏ.ஆர்.செல்லப்பா ஆகியோருடனும் நெருங் கிய தொடர்புண்டு.

திராவிடர் கழகம் நடத்திய அஞ்சலக மறியலிலும், டெல்லியில் இருந்து சென்னை வரும் மத்திய மந்திரிகளுக் குக் கருப்புக் கொடி காட்டும் போராட்டத்திலும் கலந்து கொண்டேன்.

பெரியார் நடத்திய மாநாடுகளில் கலந்து கொண்டுள் ளேன். 1948-ல் தூத்துக்குடியில் நடந்த மாகாண மாநாடு களில் கலந்து கொண்டு இருக்கிறேன்.

இந்த மாநாட்டில் திராவிடநாடு படத்தைத் திறக்க அறிஞர் அண்ணா அவர்கள் பெயர் குறிப்பிட்டிருந்தது. ஆனால் அவர் வரவில்லை.

இந்த மாநாடு நடக்கும்போது, 'தூத்துக்குடி துறைமுகத் துக்கு சுயமரியாதை இயக்கத்தார் யாரும் போகவேண்டாம்; போனால் காங்கிரஸ் காலிகள் தொல்லை கொடுப்பார்கள்' என்று பெரியார் எச்சரித்தார்.

8-12-73ல் சென்னையில் நடந்த இன இழிவு ஒழிப்பு மாநாட்டில் பங்கேற்றேன். அதில் கலைஞர் மு.கருணாநிதி அவர்கள், ''பெரியார் கடவுள் இல்லை என்று சொல்லவில் லை'' என்று பேசினார். ஆனால் கூட்டத்தில் இருந்தவர்கள்

''கடவுள் இல்லை. கடவுள் இல்லை'' என்று பந்தல் அதிரும் வண்ணம் முழக்கமிட்டனர். ''பெரியாரும் ''கடவுள் இல்லை'''' என்று முழக்கமிட்டார்.

அப்போது கலைஞரின் முகம் பேயறைந்தாற்போல் ஆனதைக் கண்டு மிகவும் ரசித்தேன். அதன்பின் அவரின் பேச்சில் களைகட்ட சில நிமிடங்கள் ஆனது.

இந்த மாநாட்டில்தான், ''சாதிக்குப் பாதுகாப்பாய் இருக்கும் அரசியல் சட்ட 24-25வது விதியை 30 நாட்களுக்குள் எடுத்துவிட வேண்டும்; இல்லையேல் கழகம் மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கும்'' என்று பெரியார் இந்திரா அம்மையாருக்கு நோட்டீஸ் கொடுத்தார்.

பெரியார் அவர்கள் வேலூரில் 24-12-73இல் மருத்துவ மனையில் காலமானார்.

பெரியாருக்குப்பின் தலைமை ஏற்ற மணி அம்மையார் தலைமையில் கழகம் நடத்திய அஞ்சலகம் மறியலில் வேலூர் தலைமை அஞ்சலகம் எதிரில் வ.ஆ.மாவட்ட தலைவர் பெருமாள் தலைமையில் கலந்து கொண்டேன்.

பிறகு தி.க.வில் இருந்து வெளியேற்றப்பட்ட தோழர். வே.ஆனைமுத்து அவர்களின் தலைமையில் பெரியார் சமஉரிமைக்கழகம், 8-8-76 அன்று அமைக்கப்பட்ட நாள் முதலாய் இக்கட்சியில் சேர்ந்து பணியாற்றி வருகிறேன்.

1939 டிசம்பரில் பெரியார் 60-ம் ஆண்டு நிறைவு விழாவை எளியமுறையில் என் ஊரில் செங்கொடியில் தராசு பொறித்த கொடிகளும் தோரணங்களும், ஞானசூரி யன் புத்தகத்தில் எழுதி இருந்த பழமொழிகளை எழுதி தோரணங்கள் கட்டியும் சிறப்பித்தேன்.

கழகம் எடுக்கும் முடிவுகளுக்கு என்னால் முடிந்த அளவு ஒத்துழைக்கக் காத்திருக்கிறேன்.

அரசியல், சமுதாயம், பொருளாதாரம் ஆகிய கொள்கை களை முன் வைத்தே, கட்சிகள் இயங்குகின்றன. நான் சமுதாயத்தில் பார்ப்பனியம், பெண்ணடிமை, தீண்டாமை முதலானவற்றை ஒழிக்க வேண்டுமென்ற கொள்கைகளை முன்வைத்தே சுயமரியாதை இயக்கத்தில் பங்கு கொண் டேன். 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு 15-ம் நாளை இந்திய

அரசு சுதந்திரநாள் என்று அறிவித்ததை, பெரியார் 'இது நமக்கு துக்கநாள்' என்று அறிவித்தார். இதை எதிர்த்து அண்ணா அவர்கள், 'இந்நநாள் மகிழ்ச்சிநாள்' என்று அறிவித்தார். சுயமரியாதை இயக்கம் திராவிடநாடு கோரிக் கையை வலியுறுத்தி வந்தது. நான் அய்யா துக்கநாள் என்ற ஆகஸ்டு-15 தினத்தை துக்கநாளாகவே கருப்புச் சட்டை அணிந்து கருப்புக் கொடியை என்வீட்டு முன் ஒவ்வொரு வருடமும் ஏற்றி வந்துள்ளேன். இது ஊர் அறிந்த உண்மை.

பெரியார் மணியம்மையைத் திருமணம் செய்து கொண் டதைச் சாக்காக வைத்து தி.க.வை விட்டுக் கூண்டோடு விலகி தி.மு.கழகம் கண்டனர். அந்தக்கூட்டத்திற்கு அண்ணா அவர்கள் தலைவர். சென்னை மாகாணம் 4 மாநிலங்களைக் கொண்டது. அதாவது ஆந்திரம், கன்னடம், மலையாளம், தமிழகம் இவைகள் தனியே பிரிந்துவிட்ட தால் திராவிடநாடு கோரிக்கையை விட்டு 'தமிழ்நாடு தமிழருக்கே'' எனக் குரல் கொடுத்தார் பெரியார். ஆனால் தி.மு.க மட்டும் விடாப்பிடியாய் ''திராவிடநாடு திராவிடருக் கே'' என்று வலியுறுத்தி வந்தது. பிறகு பெரியார் கொள்கைக்கு முரணாக தி.மு.க. தேர்தலில் குதிக்க திராவிட நாடு பிரிவினைக் கொள்கையைக் கைவிட்டது. எங்களூரில் சுயமரியாதை இயக்கம் நல்ல மாதிரி செயல்பட்டு இருந்தது. இவர்களும் என்னைவிட்டுக் கூண்டோடு தி.மு.க.விற்குச் சென்றுவிட்டார்கள்.

அப்போது தோழர். த.வேணுகோபால் சென்னையில் குடியிருந்தார். நான் மட்டும் நேரம் கிடைக்கும்போது திண்ணைப் பிரசாரம் செய்வேன். தற்போது மார்க்சிய - பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சியில் என்னால் முடிந்த வரை செயல்பட்டு வருகிறேன்.

பெரியார் சமஉரிமைக் கழகத்தின் சார்பில், மண்டல் குழு பரிந்துரையை இந்திய அரசு கிடப்பில் போட்டு இருப்பதை வன்மையாகக் கண்டிக்கும் மூகத்தான் குடியரசு தினமான 1982 ஜனவரி 26-ம் நாளில் பெ.ச.க. சார்பில் கண்டனம் தெரிவிக்க எங்கள் வீட்டின் முன் கறுப்புக் கொடி ஏற்றியும், கறுப்புச் சட்டை அணிந்தும் எங்கள் கண்டனத்தைத் தெரிவித்தோம்.

அன்று இந்த நிகழ்ச்சியில் எங்கள் ஊரான தக்கோலத் தில் நானும், தோழர். த.வேணுகோபால், தோழர்.

த.மு. துரைவேல் ஆகியோரும் மற்றும் 4 தோழர்களும் கைது செய்யப்பட்டோம்.

அன்று கைது செய்யப்பட்டு அரக்கோணம் போலீசா ரால் காவலில் வைக்கப்பட்டு இரவு 10.00 மணிக்கு, ''நாங்கள் கூப்பிடும் போது வரவேண்டும்'' என்ற நிபந்த னையின் பேரில் விடுதலை செய்யப்பட்டோம்.

பின் வழக்கு தொடரப்பட்டு 6 வாய்தாவுக்குச் சென்ற பின் வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

அடுத்து 12-6-89-ல் தமிழக அரசின் நுழைவுத் தேர்வு ஆணையை எரிப்பது தொடர்பாக மா.பெ.பொ.க சார்பாக வேலூரில் நடந்த ஆணை எரிப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டு நானும், வா.கிருஷ்ணமூர்த்தி, எம்.எஸ்.சங்கர், வாலாசா வல்லவன், க.குப்புசாமி ஆகியோருடன் கைது செய்யப்பட்டு அன்று மாலை 5.00 மணிக்கு விடுதலை செய்யப்பட்டோம்.

தொடர்ந்து மா.பெ.பொ.க.வின் பணிகளில் ஈடுபடு வேன்.

தக்கோலம்கா.ந. ஜலநாதன்

## இரும்புலிக் குறிச்சி பி.எ. சுப்பராயன்



அப்பாவு-சிவகங்கை அம்மாள் இவர்களின் மக னாக 1906 மே இல் தோன்றி இன்று எண்பத்தாறு அக வையை எட்டியுள்ள பி.எ. சுப்பராயன் அவர்களை 1952 முதல் அறிவேன். அவர் தேசிய காங்கிரஸ் இயக்கத்தில் துவக்கத்தில் ஈடுபாடு வைத்தி ருந்தார். இருப்பினும் பெரியா ரின் சுயமரியாதைக் கொள்கைகளில் பற்றுறுதியும், விருப்ப மும் கொண்டவர். இதன் காரணமாக நாளாவட்டத்தில் பெரியாருடைய அரசியல் ஆதரவுப் போக்கையே அவரும் பின்பற்றினார். தமிழ்நாடு உழைப்பாளர் கட்சியின் ஆதரவா ளராக விளங்கினார். பின்னர் பெரியாரைப் பின்பற்றி காமராசர் ஆதரவாளராகச் செயல்பட்டார்.

திருச்சி சிந்தனையாளர் கழகத்தின் மூத்த உறுப்பினர் இவர். அதனுடைய செயல்பாட்டில் இன்றும் மிகவும் ஆர்வங்காட்டுபவர். உடல்நலம் தளர்ந்த நிலையிலும், இளமைப் பருவத்தில் பொது நலப் பணிகளில் ஈடுபட்டது போலவே இப்போதும் இத்தகைய பணிகளில் ஆர்வங் கொண்டிருக்கிறார். இவருடைய துணைவியார் பெயர் பழனியம்மாள். இவர்களுடைய மூத்தமகன் குழந்தை வேலன் மூதிராச்சாவு எய்தினார். அவரும் சிறந்த சுயமரியா தைக் கொள்கைக்காரர். சீரிய தனித் தமிழ்ப்பற்றாளர். இளைய மகன் கலியபெருமாள் (தேசியத் தென்றல்) காங்கிரசுக் கட்சியில் தீவிர செயல்பாடு கொண்டவர்.

-வே. ஆனைமுத்து

# வீரானந்தபுரம் ந. கணபதி



பிரமாதீச ஆண்டு ஆவணித் திங்கள் 31ஆம் நாள் திங்கள் கிழமைக்குச் சரியான 1913ம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 15ம் நாள் (79 வயது) பிறந்தேன். என்பெற்றோர் தந்தை நடாராசன், தாயார் ஆச்சிக்கண்ணு ஆவர்.

நான் பிறந்த ஊர் : வீரானந்தபுரம், காட்டுமன்னார் கோயில் வட்டம், தென்னார்க்காடு மாவட்டம்.

நான் குடியிருப்பது : பிறந்த ஊராகிய வீரானந்தபுரத்தில்

என்னுடைய குடும்பப் பின்னணி

என்னுடைய குடும்பத்தில்
க. கோமளவல்லி (முதல் மனைவி)
க. சீதாலட்சுமி (இரண்டாவது மனைவி)
க. அறிவுக்கடல் (மகள்)
க. அறிவொளி (மகன்) உள்ளோம்.

பெண்ணின் படிப்பு பி.எஸ்ஸி., (கணக்கு)
என்னுடைய கல்வித்தகுதி: காட்டுமன்னார் கோயில் நடுநிலைப்பள்ளியில் மூன்றாம் படிவம் (III Form) -எட்டாம் வகுப்புப் படித்துவிட்டு, கடலூர் அரசினர் பயிற்சிப் பள்ளியில் 1932இல் சேர்ந்து தேர்வு பெற்று வெளிவந்தேன். பின்னர் திருவையாறு புலவர் கல்லூரிச் சார்பில் நுழைவுத் தேர்வில் வெற்றிபெற்று பிரைமரி தேர்வு எழுதியதுடன் படிப்பு முடிந்துவிட்டது.

துவக்கப் பள்ளி ஆசிரியராகத் தென்னார்க்காடு மாவட்ட மன்றப் பள்ளிகளாகிய எள்ளேரி , அரசூர், லால்பேட்டை முதலிய ஊர்களில் சிலமாதங்கள் வேலை பார்த்துவிட்டு, உரிய வேலை தொடர்ச்சியாகக் கிடைக்காததால், திருச்சி மாவட்டம் நாகமங்கலம் என்ற ஊரில் தனியார்

பள்ளியில் வேலையில் சேர்ந்தேன். மாத ஊதியமாக ரூ.12.00 பனிரெண்டு கிடைத்து வந்தது. அது அக்காலத்தில் போதுமான ஊதியமாகும். பின்னர் மாவட்ட மன்ற உறுப்பினர் ஒருவர் உதவியால் திருச்சி மாவட்ட மன்றத்தில் முதலில் எதுமலை என்னும் ஊரில் வேலை கிடைத்தது.

பின்னர் தோகைமலை உயர் துவக்கப்பள்ளியில் பணியில் சேர்ந்தேன். அதன் தலைமை ஆசிரியர் ஒரு பார்ப்பனர். என்னுடைய பக்திவேடத்தில் மயங்கிய அவர் மிகவும் மத உணர்வுடன் பேசினார். பேச்சின் ஊடே, "இன்று மாலை ஈரோட்டிலிருந்து ராமசாமி நாயக்கன் தெலுங்குப் பட்டிக்கு வருகின்றான்; அவன் கடவுள், மதம், சாஸ்திரம், பார்ப்பான் இவைகளை எல்லாம் தாக்கிப் பேசுகின்றான்" என்று கேவலமான சொல்லால் பேசினார். 1938 இறுதிவரை மதத்திற்கு, கடவுளுக்கு, சாத்திரத்திற்கு, பார்ப்பானுக்கு எதிராக இப்படிப்பட்ட ஒரு பிரசாரம் நடப்பதே எனக்குத் தெரியாது.

நான் அப்போது இராமலிங்க அடிகளார் பேரில் பற்றுதல் கொண்டு சன்மார்க்கச் சங்கங்களில் பேசுவது, பாடல்களைப் பாடுவது போன்றவற்றில் மிகவும் ஈடுபாடு கொண்டவனாய் இருந்தேன். வெறும் பக்தனாக மட்டுமே இருந்தேன் அக்காலத்தில் அதில் எனக்குச் சிறந்த மரியாதை இருந்தது.

1932 முதல் 1938வரை அதே முக்கியப் பணியாக அலைந்தேன். இந்தச் சமயத்தில் தான், நான் தோகைமலை சென்றபோது, தலைமை ஆசிரியரால் பெரியாரைப் பற்றி வசைமாரி கேட்டேன்.

தோகைமலைப் பள்ளியிலிருந்த ஆசிரியர்களில் இருவர் தான் தமிழர்கள். அவர்கள் என்னிடம் வந்து பேச்சு கொடுத்தார்கள். அன்பாகப் பேசி, "பார்ப்பனத் தலைமை ஆசிரியர் பேச்சைக் கேட்டீர்களா? நாங்கள் தெலுங்குப் பட்டிக்கு அய்யா பேச்சைக் கேட்கப் போகிறோம். நீங்களும் வாருங்களேன்; நாளை வீடு திரும்பலாம்" என்றார்கள். சம்மதித்தேன். மாலை பள்ளி முடிந்து நாங்கள் மூவரும் பள்ளித் திண்ணையில் அமர்ந்திருந்தோம். நான் பக்திக்கு விரோதமான பேச்சைக் கேட்டுத்தான் பார்ப்போமே என்னும் நிலையில் அமைதியாக இருந்தேன். அங்கு அவரின்

மூன்று மணிநேரப் பேச்சைக் கேட்ட எனக்குப் பழைய சரக்கெல்லாம் எங்கோ ஓடிமறைந்துவிட்டது. அவர் முகத்தின் சிங்கத்தோற்றமும் அறிவு வீச்சுடைய கண்களும், அவரை நான் நிமிர்ந்து பார்க்கக் கூசினேன். இரவு 11 மணிக்குத் திரும்பி வந்து பள்ளியிலேயே நால்வரும் தங்கிவிட்டு, விடியுமுன் அய்யாவை அனுப்பிவிட்டுத் திரும்பினோம். அவர்கள் எங்கள் பால் காட்டிய பாச உணர்வை என்றும் மறக்க முடியாது. இதனைத் தனிக் கட்டுரையாக எழுத உள்ளேன்.

அச்சமயத்தில் என் திருமணம் முடிந்தது. மனைவியுடன் தோகைமலை சென்றுவிட்டேன். என் நெற்றியோடு என்னுடன் வந்த ஆசிரியர்கள் நெற்றியும் மிகமிகச் சுத்தமாக எந்தப் பூச்சும் இல்லாததைக் கண்ட தலைமை ஆசிரியர், ‘தெலுங்குப்பட்டிபோய் வந்ததன் பலன் நன்றாக உங்கள் முகத்தில் தெரிகிறதே!’ என்று புன்சிரிப்போடு சொன்னார்.

தோகைமலை பணிக்காலம் முடிந்ததும் அங்கிருந்து என்னை கரூர்பக்கம் உள்ள அரவக்குறிச்சிக்கு மாற்றிவிட்டனர். அரவக்குறிச்சியில் சிலவாரங்களே பணியாற்றியிருப்பேன். உடன் இலப்பைக்குடிக்காட்டிற்கு நிரந்தரமான ஓர் இடத்தில் பணியாற்ற அமர்த்தப்பட்டேன். அந்தக் காலத்தில் தான் நமது இயக்கத்தின் தற்போதைய செயலாளர் தோழர் வே.ஆனைமுத்து இலப்பைக்குடிக்காட்டில் படிக்க வந்தபோது, அவரின் அன்பான துணை கிடைத்தது. அன்று முதல் இன்றுவரை 53 ஆண்டுகளாக இவரும் நானும் ஒரே நோக்கத்துடன் எவ்விதக் குறைபாடுகளும் இன்றி ஒன்றியிருந்து அய்யாவின் தொண்டர்களாகவே இருந்து வருகின்றோம்.

பெரம்பலூர் வட்டத்தில் இருந்தபோது பெரியாரை முதன் முதலில் வி.களத்தூருக்கு அழைத்துக் கூட்டம் நடத்தினோம். அந்தக் காலகட்டத்தில் அன்பில் தர்மலிங்கம், நெடுஞ்செழியன், பூவாலூர் அ.பொன்னம்பலம், புலவர் வை.பொன்னம்பலனார், கோ.குழந்தைவேலன், உடையார் பாளையம் ஆசிரியர் சா.வேலாயுதம் ஆசிரியர் வைத்தியலிங்கம், திருச்சி ஆர்.நாகசுந்தரம், அரியலூர் தோ.செ.ராமசாமி, ஆசிரியர் ஆர்.ரெங்கசாமி, ஆய்சாவடி பி.ஆர்.சின்னசாமி, அரியலூர் தங்கவேல், புலவர் இராம. அரங்கராசன், பென்னக்குணம் ஆர்.தனராசு, வி.என். அண்ணாமலை,

அகரம் மு.அழகப்பன் போன்ற பெரியார் தொண்டர்கள் பலருடன் தொடர்பு கொண்டு அய்யாவைக் கொண்டும் மற்றவர்களைக் கொண்டும் விருத்தாசலம், பெரம்பலூர், உடையார் பாளையம், அரியலூர் வட்டங்களில் கூட்டம் போடாத ஊர்கள் இல்லை என்று கூறும் அளவுக்கு முயன்று நடத்தினோம்.

இதற்கெல்லாம் மிக எடுத்துக்காட்டாக பெரம்பலூர் வட்டம் குன்னத்தில் 1950இல் ஒரு மாபெரும் மாநாட்டை மிகச்சிறப்பாக நடத்தி முடித்தோம். மாநாட்டுக்கு வந்தவர்கட்கெல்லாம் பிரியாணி விருந்து; அய்யாவுக்கு மட்டற்ற மகிழ்ச்சி. அது முதற்கொண்டு அய்யா என்னை, "குன்னம்! வாங்க " என்றே அழைப்பார்.

நான் குன்னத்தில் இருந்தபோது பொதுத் தேர்தல் வந்தது. அப்போது அய்யா காங்கிரசைக் கடுமையாக எதிர்த்தார்; உழைப்பாளர் கட்சியை ஆதரித்துக் கடுமை யான பிரசாரம் மேற்கொண்டார். அப்போது ஆனைமுத்து அவர்கள் சலியாது ஓய்வு ஒழிச்சல் இன்றிப் பெரிதும் பாடுபட்டு அய்யாவின் பாராட்டைப் பெற்றார்.

எங்களில் பலபேர் மீது மேல்சாதிக்காரர்களுக்குப் பெருமளவில் கோபம் கொண்டு, என்னென்ன வழிகளில் இடையூறு செய்யமுடியுமோ அத்துணையும் செய்துவந்த னர். ஆனாலும் அவர்கள் ஏதும் செய்யமுடியாது அசந்து விட்டனர்.

இச்சமயத்தில்தான் உடையார் பாளையம் ஆசிரியர் வேலாயுதம் அவர்களையும், என்னையும் சேர்த்து ஒழித் துக்கட்டத் திட்டம் போட்டனர். இதற்கு ஒரு நல்ல சமயம் கிடைத்தது அவர்கட்கு. உடையார் பாளையம் வட்டத்தில் வன்னியர் சங்கம் மிகத் தீவிரமாய்ச் செயல்பட்டது. அதன் நிர்வாகிகள் சிலருடைய நடவடிக்கைகளுக்கு உடையார் பாளையம் வேலாயுதம் மிகவும் எதிராக இருந்தார். அதைப் பயன்படுத்திக் கொண்டு மேல்சாதிக்காரர்கள் வன்னியர் களைக் கொண்டே பட்டப்பகலில் வேலாயுதத்தைக் கொன்று தூக்கில் தொங்கவிட்டனர். அந்தக் கொலையாளி கள் அன்று மாலையே என் வீட்டுக்கு வந்தார்கள்.

அவர்கள் என்னை அழைத்துப் போக வந்ததாகச் சொன்ன காரணங்களையும், மற்றும் அவர்களின் செயல்

களையும் தோற்றத்தையும் கண்ட என் முதல் மனைவியார் நான் அவர்களுடன் போவதைத் தடுத்துவிட்டார். மறுநாள் காலையே வேலாயுதம் கொல்லப்பட்ட செய்தி 'விடுதலை' யில் வெளியானது கண்டு அதிர்ச்சி அடைந்தோம். நிற்க.

எனது இரண்டு பிள்ளைகட்கும் அய்யா அவர்கள் என் ஊராகிய வீராணந்தபுரத்திற்கு இருமுறை வந்தபோது பெயர் சூட்டி மகிழ்வித்தார்கள்.

நானும் ஆனைமுத்து அவர்களும் ரொக்க முதலீடு வைத்து 1950 மத்தியில் 'குறள்மலர்' என்ற வாரப் பத்திரிக்கையைத் திருச்சியில் தொடங்கி நடத்தினோம். அதன் வளர்ச்சி அனைவருக்கும் வியப்பூட்டியது. திருக் குறள் முனுசாமியை ஆசிரியராகவும், ஆனைமுத்து அவர் களைத் துணை ஆசிரியராகவும் நான் வெளியீட்டாளராக வும் இருந்து வெளியிட்டோம். இதழின் வளர்ச்சியைப் பொறுக்கமுடியாத முனுசாமி அவர்கள் வேண்டாத நடவடிக் கைகளை மேற்கொண்டார். நாங்கள் அவரை விரும்பாததால் எங்கள் மேலேயே ஒரு பொய் வழக்குப் போட்டுத் தோற்றார். நான் வெளியிடுபவராக இருந்து கொண்டு ஒரு இதழ் நடத்துவது சட்டவிரோதம் என்றும் அவரால் புகார் எழுதப்பட்டு மாவட்ட மன்றத்திலிருந்து விளக்கம் கேட்டார் கள். நான், ''குறள் மலர்'' வெளியீட்டு உரிமை வேண்டாம் என எழுதிக் கொடுத்துவிட்டேன்.

பிறகு ஆனைமுத்து அவர்கள் 1957இல் ''குறள் முரசு'' என்ற பெயரில் ஒரு வார ஏடு நடத்திப் பெரிய கடன் சுமையில் அவதிப்பட்டு இதழ் நிறுத்தப்பட்டது.

நான் தமிழக அரசால் நல்லாசிரியர் விருது பெற்றபோது அதன்பாராட்டு விழாவிற்குப் பெரியார் அவர்கள் என் ஊருக்கே வந்து தலைமை தாங்கிப் பொன்னாடை போர்த்து வித்தது என்றும் மறக்க முடியாத நிகழ்ச்சியாகும். இவ்விழா வில் வே.ஆனைமுத்துவும் பங்கு கொண்டார். அதன் தொடர்ச்சியாகக் கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன், கல்வி இயக்குனர் நெ.து. சுந்தரவடிவேலு, எஸ்.எஸ்.ராமசாமி போன்றவர்களும் எனக்குப் பொன்னாடை போர்த்தி மகிழ் வித்தனர்.

நான எப்போதும் போல் பெரியாரியத் தொண்டனா கவே இருந்து வருகின்றேன். பெரியாரின் கருத்துக்கு

உண்மையாகப் பங்களிக்கும் மா.பெ.பொ.க.வில் என்னை இணைத்துக் கொண்டு பணியாற்றி வருகின்றேன்.

பெரியாருக்குப் பிறகு அவர் கருத்து இந்தியா முழுவதும் பரவவேண்டும், ஏன் உலகம் முழுவதும் பரவவேண்டும் எனப் பேரார்வத்தில் தூண்டப்பட்ட நமதியக்க அனைத்துத் தோழர்கட்கும் உள்ள எண்ணமும் அதுவே.

பெரியாரின் வகுப்புரிமை எண்ணங்கள் நிறைவுபெற மைய அரசால் இயலுமே தவிர, மாநில அரசால் ஏதும் இயலாதென்பதை அறிந்தே நமது செயலர் அவர்கள் அய்யா கருத்தை அகிலமெல்லாம் எடுத்துச் செல்லத் துடிக்கிறார்.

அந்த நிலைக்கு நான் என்னாலான அனைத்தும் செய்வேன் என்பதில் இந்த 79ம் வயதிலும் ஓர் இளைஞனாகவே இருக்கிறேன்.

அய்யா அவர்கட்குப் பிறகு அவரின் சிந்தனை உலகுக்குப் பயன்படவேண்டுமே, அதற்கு என்ன செய்வது என்று மாதக்கணக்கில் சிந்தித்த நமது செயலாளருக்கு உறுதுணையாய் இருந்து' ''பெரியாரின் சிந்தனைகள்'' என்ற பெருநூல் வெளிவர நான் ஆற்றிய தொண்டினை நினைத்து என்வாழ்நாளில் எப்போதும் பெருமிதம் கொள்வேன்.

அதன் வெளியீட்டுவிழாவில் அப்போதைய தமிழக முதலமைச்சர் கலைஞர் கருணாநிதியவர்கள் எனக்குப் பொன்னாடை போர்த்தி மகிழ்வித்தார்.

என் குடும்பத்தில் என் துணைவியர்கள் க.கோமளவல்லி, க.சீத்தாலட்சுமி பிள்ளைகள், மருமகன் ந.சீனிவாசன் பி.ஏ., எல்லோருமே பெரியார் கருத்துக்குத் தொண்டர்களாகவே இருப்பார்கள் என்று எண்ணுகின்றேன்.

நான் ஒரு பெரிய நூல் நிலையத்தை உருவாக்கிக் காத்து வந்தேன். ஏராளமான பகுத்தறிவுப் புத்தகங்கள், பெரியார் கருத்துக்கள் நிறைந்த நூல்கள், குறள் பற்றிய பல' புலவர்கள் எழுதிய ஆய்வு நூற்கள், கம்யூனிச சித்தாந்தம் இப்படிப் பலநூல்கள் சேர்த்து வைத்திருந்தேன்.

பகுத்தறிவு சம்பந்தமான நூற்கள், குறள் சம்பந்தமான ஆய்வு நூல்கள் இவைகளை மட்டும் வைத்துக் கொண்டு,

நமது இயக்க அருமைத் தோழர் வாலாசா வல்லவனிடம் சிலவற்றையும், என் மாப்பிள்ளையிடம் பெரும்பகுதியை யும் ஒப்படைத்துவிட்டேன்.

என் வாழ்க்கையில் ஏற்பட்ட பலநிகழ்ச்சிகள் இருந்தா லும் விரிக்கிற் பெருகும் என்று ஒதுக்கிவிட்டு ஒரே ஒரு நிகழ்ச்சியை மட்டும் சொல்லி முடிக்கின்றேன்.

நான் குன்னத்திலிருந்தபோது அருகில் இருந்த ஊரான அந்தூரில் ஓர் இளைஞர் கி.இராமசாமி என்பவர் குடும்பத் தோடு கூடிய ஒரு துறவியாக உயர்ந்த உள்ளமும், ஒழுக்கமும், அன்பும் உடையவராக என்னோடு அன்பாகப் பழகி வந்தார். அவரை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. இப்படிப்பட்ட நல்ல ஒழுக்க சீலர் ஒருவரை நமதியக்கத்திற் குத் திருப்பவேண்டும் என்ற எண்ணத்தில் அய்யாவின் கொள்கைகளைப் பற்றி அடிக்கடி அவரிடம் பேசி விவாதம் செய்வேன். அவரின் அய்யவினாவுக்கெல்லாம் தக்க பதில் சொல்லியும் வந்தேன்.

ஒரு நாள் என்னிடம் பேசிக் கொண்டிருந்த போது, 'நீங்கள் பெரியாருக்குத் தேவைப்படுகிறீர்கள். உங்களது ஒழுக்கம் நேர்மை இவைதான் பெரியார் தொண்டர்கட்குத் தேவை. நீங்கள் எங்களோடு இணைந்து தொண்டாற்றின் மிகவும் நலமாயிருக்குமென'க் கூறினேன்.

மறுநாள் குன்னம் வந்தபோது நெற்றியில் திருநீறு இல்லை; கழுத்தில் உத்திராட்சம் இல்லை; இடையில் வேட்டி தளர்த்திக் கட்டி இருந்தார். புதிய மனிதராக என் முன் நின்றார். அவருக்கு அவர் சமுதாயத்தில் பெருமதிப்பு இருந்து வந்தது. அவர் அய்யா தொண்டனாக மாறியதும் அவர் மரியாதையாவும் பெரியாரியக்கத்துக்கு உதவியது. முழுமூச்சுடன் பெரியார் கொள்கைப் பிரசாரத்தில் ஈடுபட் டுள்ளார். இது என் ஆயுளில் என்றும் மறக்க முடியாத நிகழ்ச்சியாகும்.

விரைவில் திருக்குறளுக்குப் புதிய நோக்குடன் மாணவர்களுக்கு உதவும்படி உரை ஒன்று எழுதிவிட வேண்டும் என்பதே கடைசி ஆசை. எனதாயுள் உள்ளள வும் மா.பெ.பொ.க.வின் தொண்டனாகவே இருப்பேன் என்று கூறி முடிக்கின்றேன்.

வீரானந்தபுரம் — ந.கணபதி
5-5-1992

# கோ.குழந்தைவேலன்



என் பெயர்:
கோ.குழந்தைவேலன்
என் பிறந்தநாள்:
26-9-1913 வயது : 79
என் பெற்றோர்:
கோபால் சின்னப்பிள்ளை
நான் பிறந்த ஊர்:
பெரிய குயப்பள்ளம்

நான் குடியிருக்குமிடம் : பெரிய குயப்பள்ளம், ...ட்டகுடி வட்டம், தென்னார்க்காடு மாவட்டம்.

என் குடும்பப் பின்னணி : நடுத்தர வேளாண் குடும்பம்.

என் முதல் மனைவி : வள்ளியம்மை இறந்துவிட்டார்; இவருக்கு ஒரு மகள் மட்டுமே.

என் இரண்டாம் மனைவி: இன்ப வடிவி. இவர் வழி 5 பெண்கள், 2 ஆண்கள். அனைவருக்கும் திருமணம் முடிந்து நலமே வாழ்கின்றனர். மூத்தமகன் தொல்காப்பியன். குடும்பப் பொறுப்பை ஏற்றுள்ளார்.

கல்வி, மற்றும் தொழில் விவரம்: நான் 1931ஆம் ஆண்டு 8ஆம் வகுப்புப் படித்து முடித்தேன். அருகில் உயர்நிலைப் பள்ளி இன்மையால் மேற்கொண்டு படிக்க இயலவில்லை. 1932ஆம் ஆண்டு சந்நாசிநல்லூர் அருணாசலம் உதவிபெறும் தொடக்கப் பள்ளியில் பயிற்சி பெறாத ஆசிரியராக, திங்களுக்கு ரூ.6.00 ஊதியத்தில், சேர்ந்தேன். 1935-37ல் திருச்சிராப்பள்ளி அரசினர் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் ஹையர்கிரேடு (Higher grade) பயின்று, மீண்டும் சந்நாசி நல்லூர் பள்ளியிலேயே பணியேற்றேன். இந்நாட்களில் புலவர் திரு.ச.அ.சிதம்பரனார், ஊராள்வோர் இரா.சுப்பராயன், கொடுக்கூர் இரா.விசுவநாதன் எம்.ஏ., போன்றோரின் நட்பும், நல்வாழ்க்கை நெறியும் ஓரளவு தமிழறிவும் பெற்றேன்.

1937ல் திருச்சி தேவர் மன்றத்தில் நாவலர் சோமசுந்தர பாரதியார் தலைமையில் நடந்த இந்தி எதிர்ப்பு மாநாட்டில்

பெண்ணாகடம் கடந்தைத் தமிழ்ச்சங்கத்தின் சார்பில் புலவர் இரா.சிவகுருநாதன் தலைமையில் 15 தொண்டர்கள் சென்று மாநாட்டில் நல்ல தொண்டாற்றினோம். அப்போது தந்தை பெரியார், தமிழவேள் உமாமகேஸ்வரம் பிள்ளை, முத் தமிழ்க் காவலர்கி.ஆ.பெ.விசுவநாதம், நாவலர் சோமசுந்தர பாரதியார் ஆகியோருடன் கலந்து பழகும் அரிய வாய்ப்பி னைப் பெற்றேன். சுயமரியாதை இயக்கத்தில் மிக முக்கிய மானவர்களான தி.பொ.வேதாசலனார், டி.டி.வீரப்பா, பூவா ளூர் பொன்னம்பலனார், க. நல்லதம்பி, தமிழ்மறவர் வை.பொன்னம்பலனார், குடந்தை கே.கே.நீலமேகம், வே.ஆனைமுத்து, கடலூர் திராவிடமணி, பீட்டர் பி.ஏ., முதலியவர்களுடன் நெருங்கிய தொடர்பு வைத்திருந்தேன். மற்றும் திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகள், மறைமலைய டிகள், திரு.வி.க., பண்டிதமணி கதிரேசன் செட்டியார், கல்வெட்டு ஆராய்ச்சியாளர் சதாசிவப் பண்டாரத்தார், மறை திருநாவுக்கரசு, வீ.உலக ஊழியர், பாவேந்தர் பாரதிதாசன், கரந்தை ந.மு.வேங்கடசாமி நாடார், சிதம்பரம் சீனு. திருவேங்கட நயினார், புலிக்குத்தி. இராமசாமி, சு.பூவாரா கன் பி.ஏ., போன்றோரிடம் நெருங்கிய தொடர்பு பெற்றிருந் தேன்.

1940ல் திருச்சிராப்பள்ளி மாவட்டக் கழகப் பள்ளியில் (பூலாம் வலசு, கரூர் வட்டம்)ல் சேர்ந்து 1945ஆம் ஆண்டுவரை பணிபுரிந்தேன்.

1941ல் உடையார் பாளையம் வட்டம் அங்கனூர் பள்ளியில் பணியாற்றிய பொழுது, சந்நாசிநல்லூரில் "இளந் தமிழர் இயக்கம்" என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தி, அதன்மூலம் அன்றைய அறிஞர்கள் பெண்ணாகடம் புலவர் சிவகுருநாதன், புலவர். வீ. உலகஊழியர், புலவர் சுந்தரராச உடையார், தமிழ் மறவர் வை.பொன்னம்பலனார், கோ.சி. பெரியசாமிப் புலவர், பேராசிரியர் க.அன்பழகன், தந்தை பெரியார் போன்றவர்களை அழைத்து சிறப்பு விழாக்கள் நடத்தி மற்ற மக்களின் விழிப்புணர்வுக்கு வழிவகுத்தேன். 1943ல் திரு.கொ.இரா.விசுவநாதன் அவர் கள் தலைமையில் திரு.க.அன்பழகன் (அப்போது கல்லூரி மாணவர்) அவர்கள் "காலமும் கருத்தும்" என்ற தலைப் பில் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார். அதுவரை நான் நாட்டுப் பற்றும், மொழிப்பற்றும், சைவப்பற்றும் உடைய வனாக இருந்ததோடு, சைவ சமயச்சொற்பொழிவுகளில்

ஆர்வமும் ஆரியக் கொள்கையில் வெறுப்பும் கொண்டிருந்த எனக்கு, க.அன்பழகன் அவர்களின் சொல்லாற்றல், என்னையும் என்னைச் சார்ந்த பல தோழர்களையும் பகுத்தறிவாளர்களாக மாற்றம் செய்தது.

அந்நாளில் உணர்வைத் தூண்டும் "திராவிடநாடு", "விடுதலை" இதழ்களைத் தொடர்ந்து படித்ததனால் பகுத்தறிவுப் பாதையில் ஒரு தெளிவு ஏற்பட்டது. எனது இந்த ஈடுபாட்டை அறிந்த அப்போதைய மாவட்டத் தலைவர் (District Board) திரு.பா.வேங்கடாசலம் பி.ஏ., பி.எல்., அவர்கள் என்னையும் என்னுடன் அணுக்கத் தொடர்புடைய தோழர்கள் கரடிக்குளம் திரு.சா.வேலாயுதம், திரு. இராமச்சந்திரன் ஆகிய மூவரையும் தண்டனைக்குரிய இடங்களாகப் பார்த்து மாவட்டத்தின் வசதியற்ற இடங்களுக்கு மாற்றிவிட்டார். அங்கும் எங்களது இயக்கப் பணி சிறக்க நிகழ்ந்ததைப் பொறாது, மேலும் தொல்லைகள் கொடுத்தார். அத்தொல்லைகளைப் பொறாமல், நானும் தோழர் சா.வேலாயுதம் அவர்களும் இனி இவரது நிர்வாகத்தில் பணி செய்வதில்லையெனவும், இராணுவத்தில் சேர்வதெனவும் முடிவெடுத்தோம். அம்முடிவின்படி இராணுவத்திற்கு ஆள் சேர்க்கும் முகாமில் நானும் சா.வேலாயுதம் அவர்களும் சேர்ந்தோம். அன்று நடந்த தேர்வுகளில் நான்மட்டும் வென்றேன்; போர்த் துறைக்குச் சென்றேன். அங்கு மருத்துவ முகாமில் பணியாற்றினேன். 1947ல் போர் நிறுத்தம் ஏற்பட்டதால் மீண்டும் திருச்சிமாவட்டம் இடையக்குறிச்சிப் பள்ளியில் பணியேற்றேன். அங்கு என்பணி சிறப்பாக அமைந்தது.

அந்நாட்களில் உடையார்பாளையம் வட்டம் "வன்னியர் கல்வி வளர்ச்சிக் கழகம்" என்ற பெயரில் ஓர் அமைப்பை ஏற்படுத்தி, அதன் தலைவர் கொ.இரா.விசுவநாதன் எம்.ஏ., செயலாளர் திரு.சா.வேலாயுதம் இவர்களுடன் இணைந்து செயலாற்றினேன். அக்கழகத்தின் வாயிலாகப் படிக்க வாய்ப்பில்லாத வன்னிய இன மக்களுக்குப் படிப்புதவி வழங்கி, பல மாணவர்கள் முன்னேற வழிவகுத்தோம். அதில் எனது பணி பெரிதும் பயன்பட்டது. அந்நாட்களில் தோழர் சா.வேலாயுதம் அவர்களின் உணர்ச்சி மிக்க உரைகள் மாற்றார்க்கு வெறுப்பை உண்டாக்கியதின் விளைவாக 1947 நவம்பரில் என் அருமைத் தோழர் சா.வேலாயுதம் அவர்கள் கொடியவர்களால் கொலை

யுண்டார். அவரது மறைவால் துயருற்ற மனைவி மக்களுக்கு ஆறுதல் கூறியதோடு, அவர்கள் வாழ்விற்கு உதவ எங்கள் கழகத்தின் மூலம் ரூ.1000/- நிதி திரட்டி, அத்தொகையில் ஒரு ஏக்கர் நிலம் வாங்கி அவர்கட்கு உதவினோம். இப்பணிக்கு ந.கணபதி, வே.ஆனைமுத்து போன்றோரும் உதவினர். இடையக்குறிச்சியினின்றும் 1953ஆம் ஆண்டு அக்டோபர் 21ம் நாள் இலிங்கத் தடிமேடு எனும் இடத்தில் ஒரு துவக்கப் பள்ளியும் ''திருவள்ளுவர் திக்கற்றோர் இல்லம்'' என்ற அமைப்பையும் தவத்திரு. முருகானந்த அடிகளாரின் ஆக்கம் பெற்றும் நண்பர் கொ.இரா.விசுவநாதன் தலைவராகக் கொண்டும் என்னை ஓராசிரியனாகக் கொண்டும் அந்நிறுவனம் தொடங்கப்பெற்றது. அந்நிலையம் நல்ல வளர்ச்சிபெற்று, 1960ஆம் ஆண்டு அன்றைய ஆளுநர் மேதகு விஷ்ணுராம் மேதி அவர்களால் (அன்றைய மதிப்பு ரூ.50,000 உள்ள) கட்டிடம் திறந்து வைக்கப்பட்டது.

1962ஆம் ஆண்டு அப்பள்ளியை விடுத்து, என் சொந்த ஊரான பெரிய குயப்பள்ளத்திற்கே குடியேறினேன். அதுவரை எங்கள் ஊரில் பள்ளியே இல்லை. அதுபோது நான் பெரிதும் முயன்று எங்கள் ஊரில் அமைச்சர் கோ.பூவராகன் அவர்களைக் கொண்டு பள்ளி திறக்க ஏற்பாடு செய்தேன். பின்னர் அப்பள்ளியில் நானும் சேர்ந்து பணியாற்றினேன். எனது உழைப்பைப் பாராட்டி அரசு, 1967க்குரிய நல்லாசிரியர் விருதினை வழங்கிச் சிறப்பித்தது. இப்பள்ளியினின்றும் 1972ல் ஓய்வு பெற்றேன். தற்போது வேளாண் தொழிலுடனும், முடிந்த அளவு நம் இயக்கப் பணியுடனும் இருந்து வருகிறேன்.

பெரியாருடன் முதல் சந்திப்பு: நான் 1936ல் பெரியாருடைய பேச்சை திருச்சியில் கேட்டேன். தோழர் சா.வேலாயுதம் அவர்கள் கொலையுண்டபின், அவரது மூத்தமகள் மங்கயைர்க்கரசியை அழைத்துக் கொண்டு திருச்சி தேவர் மன்றத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியின் போது, தந்தை பெரியாரிடம் அவர்களின் நிலைக்கு உதவி வேண்டினேன். அப்போது பெரியார் அவர்கள் ரூ.200/- கொடுத்துப் பின்னர் உதவுவதாகக் கூறினார்கள். உடனிருந்த நடிகவேள் எம்.ஆர்.இராதா அவர்கள் அரியலூரில் நடந்த நாடக வசூலில் ரூ.100/- கொடுத்து உதவினார்கள். அடுத்து அண்ணாத்துரை அவர்களும் கலைஞர் கருணாநிதி மூலமாக,

மங்கையர்க்கரசி - கே.என்.இராமச்சந்திரன் திருமண நாளன்று அன்பளிப்பாக ரூ.1000/- வழங்கினார்.

1946ல் என்னால் ஏற்பாடு செய்யப்பட்ட ''இரணியன் அல்லது இணையற்ற வீரன்'' என்ற நாடகத்திற்குத் தலைமையேற்றிட சந்நாசி நல்லூர் என்ற ஊருக்கு தந்தை பெரியார் வந்தார். ஆனால் அந்த நிகழ்ச்சியை நான் முன்னின்று நடத்த இயலாமல் இராணுவத்தில் சேர்ந்துவிட்டேன்.

பெரியாருடன் கழகப் பணிகள்: பெரியார் நடத்திய எந்தப் போராட்டங்களிலும் நான் கலந்து கொண்டதில்லை. எனினும் 8 ஆண்டுகளுக்கு முன் சிதம்பரத்தில் நிகழ்ந்த மா.பெ.பொ.க. போராட்டத்தில் கலந்து கொண்டு காலையில் சிறைப்பட்டு மாலையில் விடுதலை பெற்றேன்.

பெரியார் சமஉரிமைக்கழகம் தொடங்கிய நாளிலிருந்து இன்றுவரை கட்சியின் தொண்டனாகப் பணியாற்றி வருகிறேன். 1972ல் பெண்ணாகடத்தில் தொடக்கப்பட்ட பகுத்தறிவாளர் கழகத்தில் தலைவராகவும், செயலாளராகவும் பல ஆண்டுகள் பொறுப்பேற்றுள்ளேன். எனது பணிக்காலத்தில் எவ்வித வசதியும் இல்லாதிருந்த வடகரை என்னும் ஊரை ஏற்பு (தத்து) எடுத்து அவ்வூரில் குடிநீர் வசதி, கல்விச் சாலை, சாலை வசதி மற்றும் கைம்பெண் மணம், கலப்புமணம் ஆகியவற்றையும் செயல்படுத்தினேன். வேறு பொதுப்பணிகள் (அ) தொண்டுகள்:-மாளிகைக் கோட்டம் கூட்டுறவு சங்கத்தின் தலைவராக 9 ஆண்டுகளும், பெண்ணாகடம் கூட்டுறவு பால் உற்பத்தி விற்பனைச் சங்கத்தின் தலைவராக 5 ஆண்டுகளும் பணியாற்றியுள்ளேன்.

குடும்பத்தினர் இயக்கப்பணி: என் குடும்பத்தினர் அனைவருமே பகுத்தறிவாளர்கள்; எனது துணைவியார் அதில் தெளிந்த அறிவு பெற்றவர்கள், எனது பணிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிப்பவர்கள்.

நான் பெரியாரால் பாராட்டப்படும் அளவுக்கு அவருடன் நெருங்கிப் பணிபுரியவில்லை. நமதியக்கம் ''பெரியார் பெருந்தொண்டர்'' என்ற சான்றினை வழங்கியுள்ளது.

எனக்கு மாவட்டப் பள்ளிகளில் வேலை வாய்ப்பு கொடுத்தவர் அப்போதைய தலைவராக இருந்த பா.வேங்கடாசலம் பிள்ளையவர்களே! பின்னர் எனது சுயமரியாதைப்

பணிகளைப் பொறுத்துக் கொள்ள இயலாது தொல்லைகள் கொடுத்தவரும் அவர்களே! அத்தகையவர் நான் இலிங்கத்தடிமேட்டில் பணிபுரிந்தபோது முன்னாள் தமிழக முதல்வர் ஓ.பி.இராமசாமி ரெட்டியாருடன் நிலையத்தைப் பார்வையிட வந்தபோது, ரெட்டியாரவர்களிடம் என்னைக் குறிப்பிட்டு 'இவர் நல்ல உழைப்பாளி'யெனக் கூறியதைக் கேட்டு உளம் நெகிழ்ந்தேன்.

நான் திங்களுக்கு ரூ.20/- ஊதியம் பெற்று வந்த போதே, திங்களுக்கு ரூ.2/-க்குக் குறையாமல் நூல்கள் வாங்கும் பழக்கம் வைத்திருந்தேன். அதன்படி மறைமலையடிகள் நூல்கள், திரு.வி.க நூல்கள், பாரதிதாசன் நூல்கள் மற்றும் சங்க இலக்கிய நூல்கள் பெற்றிருந்தேன். எனது அன்புத் தோழர்கள் படிக்க எடுத்துச் செல்லும் நூல்களைத் திருப்பாமையால் நூல்நிலையம் அமைக்கும் அளவுக்கு என்னிடம் நூல்கள் இல்லை. எனினும் பெரியாரின் சிந்தனைகள் தொகுதி மூன்று, மற்றும் வே.ஆனைமுத்து அவர்களின் நூல்கள் சிலவும் பாரதிதாசன் நூல்கள் சிலவும் உள்ளன.

குயப்பள்ளம் ஞோ. குழந்தைவேலன்
15-5-92

# பட்டாளத்தார், கே. பாலசுப்ரமணி



என் பெயர்:
கே.பாலசுப்ரமணி;
என் பிறந்த தேதி: 22.5.1914
என் பெற்றோர்கள்:
குழந்தைவேல்,
அகிலாண்டம்மாள்
நான் பிறந்த ஊர்: அரியலூர்
நான் குடியிருக்குமிடம்: F-7, புருஷோத்தம வாத்தியார் தெரு, அரியலூர்.

என் குடும்பத்தில், நான் என் மனைவி சின்னப்பிள்ளை அம்மாள், மகள் கார்த்திகை வயது 45, மகன் வீரவாள் வயது 41, வாலி வயது 31, ஆகியோர் உள்ளோம்.

நான் 7வது வகுப்பு வரை படித்துள்ளேன். நான் பட்டாளத்தில் ஜமேதாராகப் பணிபுரிந்து கொண்டிருந்த போது ஒரு கண்பார்வை இழந்தபடியால் 16-4-1946ல் படையிலிருந்து விலக்கப்பட்டு, ஓய்வூதியம் பெற்றுக் கொண்டிருக்கிறேன். தற்சமயம் தையல் மிஷின் பழுது சரி செய்து தரும் தொழிலை மேற்கொண்டிருக்கிறேன்.

நான் பெரியாருடன் நெருங்கிப் பழகியது கிடையாது. நான் பக்திமானாக இருந்த காரணத்தால் பெரியாரை எனக்குப் பிடிக்காது; அவருடைய எழுத்துக்களையும் படிக்க விரும்பமாட்டேன். 1947ம் வருஷம் பெரியாருடைய பிரச்சாரம் அரியலூர் டானா சாவடியில் இரவு சுமார் 8 மணி அளவில் நடந்து கொண்டிருந்தது. அப்போது பொழுது போக்காக சில நண்பர்கள் என்னை வற்புறுத்தி, பெரியாருடைய அந்தக்கூட்டத்திற்கு அழைத்துச் சென்று பார்த்துக் கொண்டிருந்தேன். அன்று அவர் நிகழ்த்திய நாத்திகப் பிரச்சாரம் என்னைச் சிந்திக்க வைத்தது. அதன் பிறகு மறுநாளே திராவிடப் பண்ணைக்கு எழுதிப் பல நாத்திகப் புத்தகங்களை வரவழைத்துப் படித்தது முதல் நான் நாத்திகனானேன். ஆனால் என் குடும்பச் சூழ்நிலை காரணமாகவும், பென்ஷன் வாங்கிக் கொண்டிருந்ததாலும்,

நான் திராவிடர் கழகத்தில் சேர்ந்து பணி செய்ய முடிய வில்லை. அன்று முதல் இன்றுவரை நாத்திகனாகவே இருக்கிறேன்.

*1979*ல் நவம்பரில் மார்க்சிய பெரியாரியப் பொதுவுடை மைக் கட்சி வகுப்புரிமைப் போராட்டம், டில்லியில் நடத்தியதில் நான் கலந்து கொண்டு சில நாட்கள் டில்லி திஹார் சிறையில் இருந்தேன்.

தற்போது நான் மார்க்சிய பெரியாரியப் பொதுவுட மைக் கட்சியில் தொண்டனாக இருந்து கொண்டு என்னால் முடிந்தவரை நாத்திகப் பிரச்சாரம் செய்து வருகிறேன்.

நான் நோய் வாய்ப்பட்டிருப்பதாலும் கண் பார்வை குறைந்துவிட்டதாலும், பொதுப்பணிகள் செய்ய இயல வில்லை.

என் குடும்பத்தினர்கள் நாத்திகக் கொள்கைகளைப் பின்பற்றி நடந்து வருகிறார்கள்.

நான் *1946* வரை பக்தி நிறைந்தவனாக இருந்தேன். அதனால்தான், பெரியாரைச் சந்திப்பதற்குமுன் பிறந்த என்மகனுக்கு கார்த்திகை என்று பெயரிட்டேன். பிறகு பிறந்த குழந்தைகளுக்கு வீரவாள் என்றும், வாலி என்றும் பெயரிட்டேன். *1947*ல் பெரியாரைச் சந்தித்திராவிடில் நான் நாத்திகனாக மாறி இருக்க முடியாது.

என்கருத்து: எந்த நாடாயிருந்தாலும், அங்கு பொதுவு டைமை மலரவேண்டுமானால், நாத்திகத்தின் தத்துவம், கருத்து, மக்களுக்கு நன்றாகப் புரியும்படிச்செய்து, அதன் படி மக்கள் செயல்பட்டால் தான் பொதுவுடைமைக் கருத்துக்கள் தத்துவம் அவர்களுடைய மனதில் உறுதிப் படும். நாத்திகம் உறுதி அடையாத நாட்டில் பொதுவுடை மைக் கருத்துக்களை மக்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். பொதுவுடைமைக் கருத்துக்களை ஆளும் கட்சிகள் செயல் படுத்தினாலும், இரஷ்யாவைப் போல்தான் முடியும். பொரது வுடமைக்கு ஆத்திகம் எதிரி. ஆகவே ஆத்திக உணர்வை மக்களிடமிருந்து அகற்றாவிட்டால், பொதுவுடைமை அழிந் துவிடும். பொதுவுடைமை நடப்புக்கு வரவேண்டுமானால், மறைமுசமாக, அரசியல் சட்டநடப்புகளில் நாத்திகக்

கருத்தையும், பொதுவுடைமைக்கருத்தையும் மக்கள் மத்தியில் சிறுகச் சிறுகப் புகுத்தவேண்டும்; பக்குவப்படுத்த வேண்டும்.

ஆத்திகத்தை அழிக்காத நாட்டில், சட்டத்தின் மூலமாகப் பொதுவுடைமையைப் புகுத்தினால் அது முழுப்பயனைத் தராது என்பது என்கருத்து.

கே.பாலசுப்ரமணி
அரியலூர்

திருச்சி

# நோபிள் கே. கோவிந்தராஜலு



திருச்சியில் பெரியார் அவர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களில் முதலாமவர்; பெரியாரால் 'நோபிள்' என அன்பொழுக அழைக்கப் பட்டவர்; நீதிக் கட்சிக் காலந் தொட்டு திராவிடர் இயக்கத்தில் தொடர்புடையவர்; சிறந்த சுயமரியாதையாளர்- நோபிள் கோவிந்தராஜலு.

அடிநாள்தொட்டு பெரியார், சி.என். அண்ணாதுரை, அன்பில் தர்மலிங்கம், என்.வி.என், எஸ். பிரான்சிஸ், சே.மு.அ. பாலசுப்ரமணியம், அ. சித்தய்யன், எஸ்.வி. லிங்கம், நகரதூதன் திருமலைசாமி, வானமாமலை, டி.எஸ். நாராயணசாமி, எல். சுப்ரமணியம், ஜி. முத்துகிருஷ்ணன், ச. சோமு, ஈ.வெ.கி. சம்பத், எம். இராஜு, வே. ஆனைமுத்து, விடுதலை சம்பந்தம், கி. வீரமணி ஆகியோருடன் நெருக்கமாகப் பழகிப் பணியாற்றியுள்ளார்.

பெருந்தலைவர் கு. காமராசர், கோ. வெங்கடாசலபதி ஆகியோரின் பெருமதிப்புக்கும், ஆர்.ஏ. கோபால்சாமி, கே. திரவியம் முதலான உயர் அதிகாரிகளின் மதிப்புக்கும் உரியவர்.

இந்தியாவிலேயே, 32 ஆண்டுகளாக, ஊராட்சிகளின் நலன் கருதி, கட்சி சாராமல், ''பஞ்சாயத்துச் செய்தி'' என்ற ஒரு வார ஏடு (இப்போது மாதம் இருமுறை) நடத்தி வருபவர்.

1967இல் முதன் முதலாகத் திருச்சியில் ''நகர மக்கள் குழு'' சார்பில் பெரியாருக்கு வெண்கலச் சிலை அமைத்திட மூலகாரணர்கள் மூவர். அவர்கள் வே. ஆனைமுத்து, நோபிள் கே. கோவிந்தராஜலு, காவல்துறை ந. நாராயண சாமி ஆகியோர். டாக்டர் ஜோசப் ஞானாதிக்கம்,

ஏ.எஸ்.ஜி. லூர்துசாமி போன்ற திருச்சி நகரப் பெரியவர் களும் ச. சோமு. ஜி. முத்துகிருஷ்ணன், டி.டி. வீரப்பா, கே.எம். சுப்ரமணியம், சே.மு.அ. பாலசுப்ரமணியம் போன் றோர்களும் நோபிள் கே. கோவிந்தராஜுலுவின் எதிர் பார்ப்பை உணர்ந்து செயல்பட்டு அச்சிலை அமைப்பை வெற்றியாக்கிட உதவினர்.

1972இல், "பெரியார் பிறந்தநாள் விழா வளைவு" திருச்சியில் அமைந்திட மூலகாரணர் மூவர். அவர்கள் நோபிள் கே. கோவிந்தராஜுலு, அன்பில் பெ. தருமலிங் கம், இரூர் ஏ.எஸ். முத்துசாமி ஆவர். இப்பணியினை கே.எம். சுப்ரமணியம் போன்றோரின் ஒத்துழைப்புடன் சிறப்புற முடித்தவர்.

திருச்சி சிந்தனையாளர் கழகத் துவக்கத்திற்கு அடித்தள மானவர் அறுவர். வே. ஆனைமுத்து, நோபிள் கே. கோவிந்தராசலு, ச. சோமு, ஜி. முத்துகிருஷ்ணன், து.மா. பெரியசாமி, சே.மு.அ. பாலசுப்ரமணியம் ஆகி யோர் இவ் அறுவர்.

கே.எம். சுப்ரமணியம் தலைவராகவும், வே. ஆனை முத்து, து.மா. பெரியசாமி இருவரும் செயலாளர்களாகவும், நோபிள் கே. கோவிந்தராசலு பொருளாளராகவும், அன்பில் பெ. தருமலிங்கம் புரவலராகவும், ச. சோமு, ஜி. முத்துகி ருஷ்ணன், ந. கணபதி, கு. பாலகிருஷ்ணன் முதலானோர் செயற்குழுவினராகவும் இருந்து இரண்டாண்டுகள் ஈடு இணையற்ற உழைப்பை நல்கியதன் விளைவே, 1974இல் "பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள்" நூல் வெளியீடு. இன்றைய நிலையில், இதுவே பெரியார் கொள்கைக்கான- ஏறக்குறைய முழுவதுமான பெரியார் களஞ்சியம்.

இந்நூல் வெளியீட்டுக்கு நோபிள் ஆற்றிய பங்களிப்பு அரியது. அக்காலத்திலும் இப்போதும் இவருடைய துணை வியார் லட்சுமிகாந்தம்மாள் அளித்துவரும் ஒத்துழைப்பு இவருக்கு அருமருந்து.

எண்பதாம் அகவையை எட்டும் இவருக்கு, சிறந்த சுயமரியாதையாளராகத் திகழும் இவருக்கு நான்கு ஆண்மக் களும், நான்கு பெண்மக்களும் உள்ளனர்.

திருச்சியில் 'ஸ்ரீலங்கா ஹவுஸ்' என்கிற இல்லத்தில் பிறந்த இவர், திருச்சியை நிரந்தர வாழிடமாகக் கொண்டு வாழ்கிறார்.

7.6.92 வே. ஆனைமுத்து

விழுப்புரம்

# க. திருப்பாண்டியன்



*1938* முதல் சுயமரியாதைக் கொள்கைக் காவலராகவும், தென்னார்க்காடு மாவட்ட திராவிடர் கழகச் செயல் வீரராகவும் காப்பாளராகவும் திகழ்பவர்.

*1978* முதல் மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சிக்குப் பல்லாற்றாஊம் துணை நிற்பவர்.

*1982*இல் மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சியில் இணைந்து தென்னார்க்காடு மாவட்ட மா.பெ.பொ.க. செயலாளராகப் பொறுப்பேற்றுக் கட்சியின் புரவலராகவும் விளங்குபவர்.

முதிர்ந்த பருவத்திலும் சொந்த வணிகத் தொழிலைத் திறம்பட நடத்தி, தம் வருவாயின் ஒருபகுதியைப் பெரியார் கொள்கை வளர்ச்சிக்கென்றே அர்ப்பணிப்புச் செய்பவர்.

சுயமரியாதைப் பிரசாரம் திண்ணைதோறும் தெருத்தோறும் நாடோறும் முழங்க வேண்டும் என்பதில் ஆர்வம் கொண்டவர்.

வே. ஆனைமுத்து

விழுப்புரம்

# புலவர் வீர. அரங்கனார்



*பிறந்தநாள் : 1.11.1914*

**1930**களிலேயே சிறந்த சுயமரியாதைக்காரராகவும், தனித் தமிழ்க் காப்பாளராக வும் உருவானவர் புலவர் வீர. அரங்கனார் அவர்கள். தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற அவர் மறை மலை அடிகளார், மறை. திரு நாவுக்கரசு, தமிழ்மறவர் வை. பொன்னம்பலனார் ஆகியோ ருடன் நெருங்கிப் பழகியவர். சுயமரியாதை இயக்கப் பிரச்சாரத்திலும், இந்தி எதிர்ப்புப் பிரச்சாரத்திலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவர்.

**1982** முதல் மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சியின் கொள்கை விளக்குநராகப்-பேச்சாளராகச் செயல்ப டுபவர்.

அன்னாரின் துணைவியார் ஓய்வு பெற்ற தமிழாசிரியர்; வீர. அரங்கனாரின் இயக்கப் பணிக்கு மிகவும் உறுதுணை யாக நிற்பவர். தென்னார்க்காடு மாவட்டத்தில் திராவிடர் கழகத்தின் செயல்பாட்டுக்கும் இக்குடும்பத்தினர் பெரும் பங்களிப்புச் செய்துள்ளனர். இவர்களின் மகன்கள் இருவ ரும் அரசு அலுவலர்கள். விழுப்புரத்தில் புலவர் வீர. அரங்கனார் அவர்களும், க. திருப்பாண்டியன் அவர்களும் மா.பெ.பொ.க.வின் இரட்டையர் போன்று செயல்படுபவர்.

வே. ஆனைமுத்து

# வடசென்னை பி.ஏ.கே. பழனிசாமி



மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சியின் முடிவுப்படி சுயமரியாதை இயக்கத்தில் பணிபுரிந்து இன்றுவரை 75ஆம் ஆண்டு பவளவிழாக் கண்டவர்களைக் கௌரவிக்க முடிவு செய்து, அதனை வே. ஆனைமுத்து அவர்கள் என்னிடம் கூறினார்

## பிறப்பு வளர்ப்பு

நமது பி.ஏ.கே. பழனிசாமி அவர்கள் 1914ஆம் ஆண்டு சூன் மாதம் 28ம் தேதி பூசாரி கார்மேகம்-கருப்பம்மாள் தம்பதியர்க்கு முதல் ஆண் குழந்தையாகப் பிறந்தார். இவருக்குத் தங்கைகள் இருவர். முதல் சகோதரி தில்லை காமாட்சி, இரண்டாவது ஞானம். தந்தை பூசாரி கார்மேக நாடார் மூன்று குழந்தைகளுக்குத் தந்தையான பின்பும் பொறுப்புடன் குடும்ப வருமானம் பெற்று நிர்வகிக்கத் திறமையற்றவராய் இருந்தபடியால், தாய்தான் குடிசைத்தொழில் போல் உள்ள நெல்குத்தல், மாடு வளர்த்தல் போன்றவற்றைச் செய்து தன்னையும் குழந்தைகளையும் காப்பாற்ற வேண்டிய பொறுப்புக்கு உள்ளானார். 1917ஆம் ஆண்டு நாற்றங்கால் பள்ளியில் ஆரம்ப பள்ளியிலும் அதன்பின் சத்திரிய வித்யா சாலைப்பள்ளியில் 9ம் வகுப்பும் படித்தார். 1929ம் ஆண்டு ஜனவரி 9ம் தேதியோடு படிப்பை முடித்துக் குடும்பப் பொறுப்புச் சுமையைத் தன் தாயாருடன் சேர்ந்து எடுக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இதே ஆண்டு சென்னைக்குக் குடியமர்ந்தார்.

வடசென்னைப் பகுதியில் உளுந்து, பருப்பு வியாபாரம் செய்யும் கடையில் ஊழியராக அமர்ந்தார். இந்தச் சமயம் காந்திய இயக்கம் பரவலாய்ச் செல்வாக்குப் பெற்றமையால் அதில் ஈடுபட மனமுவ[illegible]யும் கண்ணப்பர் திடல் என்று பெயர் [illegible] சென்னை காந்திய இயக்க முக்கியமான[illegible] கே. கண்ணப்பர்

தொடர்பு ஏற்படுத்தி மறியலில் ஈடுபட கொண்டு பம்பாய் சென்றார். 1931ஆம் ஆண்டு மார்ச் மாதம் மறியலில் கலந்து சிறைவாசம் 10 மாதமும் அபராதம் ரூபாய் ஐம்பது கட்டத் தவறினால் மேற்கொண்டு 6 மாதம் ஏற்பட்டு சிறையில் இருந்தார். சிறைக் கைதிகள் இடையே தமிழர், தெலுங்கர், கன்னடர், மலையாளத்தார், மகாராட்டிரர், குஜராத்தியர் என்ற மொழி வேறுபாடும், சாதிமத, இனப் பாகுபாடு இருப்பதைக் கண்டார். பிரிட்ஷ் அதிகாரிகள், "உங்களு டைய இத்தனை வேற்றுமைகளைப் பெரிதுபடுத்திக் கொண் டிருக்கிறீர்கள். நீங்களா சுதந்திரம் பெறப் போகிறீர்கள்?" என ஏளனம் செய்தார்கள். இந்த நிகழ்ச்சி சிறையிலிருந்த பழனிசாமியின் உள்ளம் பெரியார் பேரில் ஈடுபாடு கொள்ளச் செய்தது. பின்னர் பெரியார் அவர்களின் சமூகச் சீர்திருத்த இயக்கம்பால் ஈடுபட மனம் உறுதி கொண்டது.. சிறைக்குள்ளே சென்ற பழனிசாமி வெளியே வரும்போது பெரியார் தொண்டராக மாறினார்.

### தொழில்துறையும் திருமணமும்

1932ம் ஆண்டு வாக்கில் சிறையில் இருந்து சென்னை திரும்பிய பழனிசாமி தொழில் செய்யும் முகத்தான் தனது தாய்க்குக் கட்டுப்பட்டு தாயார் கொடுத்த 80(அ) 90 சவரன் நகைகளை விற்று ரூ.1060/- முதலீட்டில் (சவரன் விலை ரூ.13/-க்கு விற்றார்.) பருப்பு விற்பனைத் தொழிலை ஆரம்பித்தார். வடசென்னையில் பருப்பு வணிகத்தில் பெரும் தனக்காரராகவும் சமூக சீர்திருத்தத்தில் மறைமுகமா கப் பெரியார் ஆதரவாளராய் இருந்த பி. புன்னவனம் நாடார் அவர்கள் ஆதரவும் உதவியும் பழனிசாமி தொழிலில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டது.

மாரியப்ப நாடார் அவர்கள் மகள் தில்லை சிவகாமி அம்மையாரை 1938ஆம் ஆண்டு மணந்து கொண்டார். இந்தத் திருமணம் தமிழ்க்காவலர் திருச்சி கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள் தலைமையில் பார்ப்பனர் சடங்குகள் இன்றிச் சீர்திருத்தத் திருமணமாய் செய்தார். தொழிலும் வளர்ச்சியடைந்தது. குடும்பமும் வளர்ச்சி அடைந்து தன்னு டைய மூத்த பெண்கள் இருவருக்கும் 1. தமிழ்மணி, 2. மகள் திராவிடமணி(நாகமணி) என்றும் பையன்கள் மூவருக்கு 1. ரூசோ, 2. அசோகன், 3. ஸ்டாலின் என்றும், தன்னுடைய வணிகத் தந்தி விலாசம் 'ஸ்டாலினோ' என்றும்

வைத்தார். காரணம் அதுசமயம் பெரியார் அவர்கள் இரஷ்ய சுற்றுப்பயணம் முடிந்த கால கட்டம்; சமதர்மப் பிரசாரம் துவக்கிய கட்டம்.

### வடசென்னை சுயமரியாதை இயக்கப் பணியில் ஆர்வம்

வடசென்னைப் பகுதியில் பிரசாரம் செய்தல், கூட்டம் அமைத்தல், மகாநாடு நடத்தல், நாடகம் போட்டு பிரச்சாரம் செய்தல் போன்ற பணிகளைத் தோழர்கள் எம்.கே.டி. சுப்ரமணியம், டி.வி. சுந்தரமூர்த்தி போன்றோர் உதவியுடன் செய்தார். பெரியார் தொண்டர்களாய் இருந்த குத்தூசி குருசாமி, சி.என்.ஏ. போன்றோருடன் நெருக்கமாகவும், பெரியார் அவர்கள் வடசென்னைப் பகுதி வந்தால் தன் இல்லத்திற்கு அழைத்து வந்து உபசரிப்பது தனது தலையாய கடமையாகவும் கொண்டு இருந்தார்.

வடசென்னை சாதி ஒழிப்பு மாநாட்டில் நாடகம் நடத்தும்படி பெரியார் அவர்கள் பி.ஏ.கே.பி. க்கு அனுமதி அளித்தார்கள். அந்த மகாநாடு அரண்மனைக்காரன் தெருவில் ''செயின்ட் மேரிஸ்'' மண்டபத்தில் நடந்தது. இரவு ''*சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்*'' என்ற நாடகம் நடந்தது. மகாநாட்டைச் சிறப்பாய் நடத்திய பி.ஏ.கே.பி.யைப் பெரியார் பெரிதும் பாராட்டினார்.

### சமுதாயச் சீர்திருத்தத் தோழர் பி.ஏ.கே.யின் வாழ்க்கையில் ஏற்பட்ட சோதனை

பழனிசாமியாருடைய சகோதரி ஞானம் வாழ்க்கையில் ஒரு கடினமான சூழ்நிலை ஏற்பட்டது. ஞானத்தின் கணவர் வாழாவெட்டியாய்த் தன் மனைவி ஆகும்படிச் செய்தார். இந்தச் செய்கை பெரிய சோதனையாய் இருந்தது. நாடார் சமூகத்தினருடைய ஏச்சும் பேச்சும் கடூரமாக இருந்தும் அவற்றைப் பொருட்படுத்தாமல், தங்கைக்கு, சட்டப்பிராகாரம் ''விவாகரத்து'' பெற்று, ''மறுமணம்'' முடித்து வைத்தார். அந்தத் தங்கை இன்றும் பட்டிவீரன்பட்டியில் பெரிய குடும்பத்துடன் வாழ்கிறார்கள்.

### சமுதாயச் சீர்திருத்தப் பணி குறைந்து கல்விப்பணி ஈடுபட்டல்

*1948*ஆம் ஆண்டுவரை சமுதாய சீர்திருத்தப் பணியில் ஈடுபாடுடன் இருந்த டபிள்யூ.பி.ஏ. சௌந்தரபாண்டியனை, கண்ணீர்த்துளியினர் தலைமைப் பதவிக்கு இழுக்க

முழுமுயற்சி செய்து அதில் அண்ணாதுரை தோல்வி கண்டார். தமிழக அரசியலிலும் குழப்பமானநிலை. கண்ணீர்த்துளிக் கட்சியினர் அரசியல் ஆதாயம் தேடிச் சென்றுவிட்டதால். பி.ஏ.கே.பி.,டபிள்யூ.பி.ஏ.எஸ். போன்றவர்கள் கல்விப்பணியில் கவனத்தைத் திருப்பினர்.

விருதையில் சுயமரியாதை இயக்கத்திலுள்ள ராவ்சாகிப் பெ.சி. சிதம்பர நாடார் அவர்கள் பூந்தமல்லி ரோடில் (தற்சமயம் ஈ.வி.ஆர். ரோடு) எக்மோர் சென்டிரல் மத்திய பகுதியில் ஒரு இடம் வாங்கினார். அதுதான் நாடார் மேன்சன். பி.ஏ.கே.பி. நடுநிலைப் பள்ளி, உயர்நிலைப் பள்ளிக்கு நிலங்கள் வாங்க ரூ.15,000/- ஆயிரமும், நாடகங்கள் மற்றும் வசூல் செய்து ரூபாய் 50,000/- ஐம்பதாயிரம் வரை பி.ஏ.கே. திரட்டிக் கொடுத்தார். இன்று அந்த அமைப்பின் மதிப்பு கோடியில் தேறும்.

நாடார் சமூகப்பணி ஏற்றது ஏன்?

நாடார் குலமக்கள் கல்வியற்ற நிலையில் பிற்படுத்தப் பட்ட வகுப்பாராய் 1850ஆம் ஆண்டுவரை இருந்தனர். 1900ம் ஆண்டுகளுக்குப் பின் டபிள்யூ.பி.எ .எஸ். போன்றோர் ஒருசிலர்தான் கல்வியறிவுடன் இருந்தனர். சுயநலமின்றிப் பொதுநலம் பேணுவர்களாய் இருந்தனர்; டபிள்யூ. பி.ஏ. சௌந்தரபாண்டியனார் சமூகப் பணியிலும் சீர்திருத்தப் பணியிலும் அர்ப்பணித்துக் கொண்டவர். பெரியாருடன் நல்ல முறையில் தொடர்பும், தோட்ட முதலாளியாக பட்டிவீரன்பட்டி தொகுதியிலும் விருதுநகர் பெருந்தனக்காரர்களில் செல்வாக்குப் பெற்றும், பெரியாருடன் ஆரம்ப காலத்தில் நல்ல தொடர்புடையவர்.

பெரியாருடன் சாதி ஒழிப்புப் போன்ற முற்போக்கான செயலில் இருக்கும் சமயத்திலே, தன்குலமக்கள் பிற்பட்ட நிலையில் இருப்பதால் அவர்கள் முன்னேற்றத்துக்குப் பாடுபட ஆலோசனை கலந்தார்கள். டபிள்யூ.பி.ஏ. சௌந்தரபாண்டியனுக்கு பெரியார் "தாழ்ந்த நிலையில் உள்ள உங்கள் சமூகப் பணியில் ஈடுபடத் தாங்கள், மற்ற பின்தங்கிய சமூகத்துக்கும் கல்வி முன்னேற்றடையும் வாய்ப்பளிப்பதுடன் தானும் வாழ்ந்து மற்றவரையும் வாழவைக்கும் பணியில் ஈடுபடுவது தவறில்லை" என்று கூறி சமூகப் பணியில் இறங்க அனுமதித்தார்கள்.

பி,ஏ.கே, பழநிசாமி அவர்கள் "மகாஜனம்" மற்றும் பல பத்திரிக்கைகளில் மரணத்தின் பின் மனிதன் நிலை, நல்வழிகாட்டும் கட்டுரைகள், தலைவிதி, கறுப்புப்பணம், மக்கள் நலம்பெற என்னும் தலைப்புகளில் சிறப்பான கட்டுரைகளை எழுதியுள்ளார். இன்றும் சிறந்த சுயமரியா தைக்காரராக வாழ்ந்து வருகிறார். வளர்க அவர் தொண்டு.

தொகுப்பு: டி.எஸ். கந்தசாமி, சென்னை

# ஈரோடு இரா. லூர்துசாமி



இராயப்பன் - காணிக்கையம்மாள் மூத்த குழந்தை நான். என் பிறந்தநாள் 1.4.1915. என் பெற்றோருக்கு ஒன்பது குழந்தைகள்; ஆறு ஆண்கள்; மூன்று பெண்கள்.

நான் பிறந்த ஊர் தாராபுரம். எட்டாம் வகுப்புவரை படித்துள்ளேன்.

இரண்டாவது மாகாண சுயமரியாதை மாநாடு 1930இல் ஈரோட்டில் நடந்தது. மாநாட்டுத்தேதி வரையில் நான் காங்கிரசில் இருந்தேன். மாநாட்டுக்கு அடுத்தநாள் முதல் சுயமரியாதை இயக்கத்தில் ஈடுபட்டேன். 1937-1938இல் ஈரோடு சுயமரியாதைச் சங்கச் செயலளாராக இருந்தேன். 1938இல் இந்தி எதிர்ப்புப் போராட்டம் நடந்தது. அப்போது போராட்டத்துக்குத் தொண்டர்கள் சேர்த்து அனுப்புவது, போராட்ட வீரர்களுக்குத் துணிமணிகள், அரிசி முதலான பண்டங்களை சென்னைக்கு அனுப்புவது என் பணி. இந்தப் பணிகளுக்கு ஃபோர்டு கார், மாரிஸ் மைனர் கார்-இரண்டு கார்கள் பயன்பட்டன. இவை பெரியாருடைய கார்கள். நான் அப்போராட்டத்திற்குப் போகவில்லை.

இந்தி எதிர்ப்புப் படை கோவை மாவட்டத்தில் என்.பி. காளியப்பன் தலைமையில் பிரசாரம் செய்தபோது நானும் அப்படையில் சென்றேன். நாராயணி அம்மாள் முதலானவர்களும் பங்கு பெற்றனர்.

ஈரோட்டிலும் மற்றும் கோவை மாவட்டத்திலும் நான் பல பிரசாரக் கூட்டங்கள் நடத்தியுள்ளேன். என் முக்கியத் தொழில் துணிகள் தைப்பது.

1940 திருவாரூர் மாநாடு நான் இரண்டாவதாகப் போன மாநாடு. பிறகு 1944 சேலம், 1945 திருச்சி, 1948 தூத்துக்குடி, மற்றும் மதுரை கருப்புச் சட்டை மாநாடு

முதலான எல்லா மாநாடுகளுக்கும் சென்றுள்ளேன். 1950 திருச்சி மாநாட்டுக்குப் பத்து நாள்களுக்கு முன்னரே போய்த் தங்கி வேலை செய்தேன்.

26.11.1957இல் ஆறு பேர்களுடன் ஈரோட்டில் சட்ட எரிப்புக்கு முயற்சித்தபோது கைது செய்யப்பட்டேன். ஈரோடு பி.சண்முக வேலாயுதம், செல்வநாயகம், இராசன் இதில் தீவிரமாக ஈடுபட்டவர்கள். இதில் ஆறுமாத தண் டனை அடைந்தேன்; ஆறுமாதம் கோவை சிறையில் இருந்தேன். சிறையில் மூலத்துக்கு அறுவை செய்து கொண்டேன்.

சுயமரியாதை இயக்கத்தில் என்னோடு நெருங்கிப் பழகியவர்கள் நாகை காளியப்பன், சா. குருசாமி, ஈரோடு எம்.சி. கறுப்பண்ணன், ஈரோடு இரா. முருகேசன், ஈரோடு மணி, சங்கரய்யா, சி.என். அண்ணாதுரை, கலைஞர் கருணாநிதி, ஈ.வெ.கி. சம்பத், ஈ.வி.கே.செல்வம், தவமணி ராசன், கருணாநந்தம், வீரமணி, ஈரோடு சுப்பையா, ஆர். நாராயணசாமி, அங்கப்ப செட்டியார், நாகை மணி, மாயவ ரம் சக்கரவர்த்தி, ப.ஜீவானந்தம், சாத்தான்குளம் அ. இராகவன், ஈரோடு ப. சண்முக வேலாயுதம், ஈரோடு இர. அன்னபூரணி, ஈரோடு டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி, எஸ்.ஜி. இராமாநுஜம் முதலானோர் ஆவர்.

நான் இன்றும் சுயமரியாதைக்காரனாக உள்ளேன். என் குடும்பத்தில் எல்லோரும் சுயமரியாதைக்காரர்கள். நானும் என் தம்பி ஒருவரும் இரு தங்கைகளும் இப்போது இருக்கிறோம். மற்றவர்கள் மறைந்து விட்டனர். என் மனைவி முத்தம்மாள் 1952இல் மறைந்தார். என் பிள்ளைக ளுக்குக் கலப்பு மணம் செய்துள்ளேன். என் குடும்பத்தில் ஏழெட்டுப்பேர் கலப்புமணம் செய்து கொண்டார்கள். என் குடும்பத்தில் மதஒழிப்புத் திருமணங்களும் நடந்துள்ளன.

எனது சகோதரிகள் இருவர்க்கும் மதம் விட்டு மதம், சாதி விட்டு சாதி கலப்புத் திருணம் செய்துள்ளேன். மூத்த தங்கை மேரி வெங்கடாசலம், இளைய தங்கை ஜோன்மேரி சுப்பிரமணியன். இதேபோல என் இரு மகள்களுக்கும் மதம் விட்டு மதம் சாதி விட்டு சாதி திருமணம் செய்துள்ளேன்.

இப்போது ஆஸ்திகம் செல்வாக்காக இருப்பதுபோல் தோன்றினாலும் ஒவ்வொரு குடும்பத்திலும் ஏதோ ஒரு

விதத்தில் சுயமரியாதைக் கொள்கை இடம் பெற்றே வருகிறது; பல குடும்பங்களில் கலப்பு மணம் நுழைந்து விட்டது.

சுயமரியாதைக் கொள்கைக்கு அழிவு இல்லை, இது வளரும் என்றே உறுதியாக நம்புகிறேன்.

என்னைப் போலவே என் தங்கை லூர்து மேரி வெங்கடாசலம் (70) தீவிர சுயமரியாதைக்காரராகவே வாழ்கிறார். இப்போது என் தங்கை வீட்டில் தங்கி நலமாக உள்ளேன்.

ஈரோடு இரா. லூர்துசாமி
1.6.92

# கீழம்பி மு.முத்து



## பிறப்பிடம், வசிப்பிடம், தொழில்

என் பிறந்த ஊர் சோலேரி கிராமம், செய்யார் வட்டம். இப்பொழுது குடியிருக்கும் இடம் கீழம்பி கிராமம், 21 மதுரா கிருட்டிணாபுரம், காஞ்சிபுரம் தாலுக்கா, செங்கை எம்.ஜி.ஆர் மாவட்டம். இளமையில் நெசவுத் தொழில் பிறகு வியாபாரம்.

## குடும்பப் பின்னணி

தந்தை பெயர் கே.முருகப்பன், தாயார் பெயர் முனியம்மாள். என்னுடன் பிறந்த சகோதரர்கள், மு.பரசுராமன், மு.கிருட்டிணசாமி, மு.சின்னக்கண்ணு ஆகியோர். நான் பிறந்த வருடம் 1916. என் முதல் துணைவியார் பெயர் பரிபூரணம். வைதீக முறைப்படித் திருமணம் செய்து கொண்டாலும், பகுத்தறிவுக் கொள்கைக்கு முற்றிலும் உடன்பாடாகவே கடவுள் மறுப்பு, இந்து மதப்பண்டிகைகள் புறக்கணிப்பு, திராவிட இன இழிவு செய்யும் பண்டிகை நாட்களையும் புறக்கணிக்கும் வகையில் கருப்புச்சேலை அணிவது, மற்றும் என் பகுத்தறிவுப் பிரச்சாரத்திற்கு உடன்பாடாக ஒத்துழைத்தவர். பன்னிரண்டு ஆண்டுகள் என்னுடன் ஒருமித்த கருத்தோடு வாழ்ந்து உடல்நலக் குறைவால் இயற்கை எய்தினார்.

இரண்டாவது துணைவியார் முனியம்மாள் அவர்களும் எனக்கு முழு ஒத்துழைப்புடன் வாழ்ந்து வருகிறார்கள். என்னுடைய பிள்ளைகள், மகன் சந்திரமோகன் பி.எஸ்ஸி., மகள்கள், பூகோளம், தெய்வநாயகம், சுகுணா.

## பொதுவாழ்க்கையில் ஈடுபாடு

குடும்பத்தில் என் அண்ணன் மு.பரசுராமன் அவர்கள் தந்தை பெரியாரின் சுயமரியாதைப் பிரச்சாரகராக வாழ்ந்தார். அவரின் ஆக்கமும், ஊக்கமும் என்னை சுயமரியாதை

உள்ளவராகவும், சமுதாயச் சீர்திருத்தம் பேசவும், செயல் படவும் தூண்டுகோலாக அமைந்தது. 1936 ஆம் வருடம் முதல் திராவிடர் இயக்கத்தில் சேர்ந்து இயன்ற அளவு சமுதாயத் தொண்டுகள் புரிகிறேன். நான் வசிக்கும் கீழம்பி கிராமத்தில் பலத்த எதிர்ப்புகளுக்கிடையில் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த தோழர் அரங்கசாமி, தோழர் ஏ.கே.தங்கவேல் ஆகியோர்களின் தலைமையில் பொதுக்கூட்டம் நடத்தி சுயமரியாதைக் கொள்கையைப் பரப்பினேன். கீழம்பி கிராமத்தில் பல சீர்திருத்த சுயமரியாதைத் திருமணங்களை முன்னின்று நடத்தினேன். என் அண்ணன்களும், தம்பிக ளும் ஒற்றுமையாக இருந்து பகுத்தறிவுப் பாதையில் செயல்பட்டனர். கிராமத்தில் பிரச்சாரத்திற்குப் பெரிய அளவில் எதிர்ப்பு ஏற்படும்பொழுது காஞ்சிபுரத்தில் இருந்த தோழர் ஏ.கே.தங்கவேல் தோழர் அரங்கசாமி ஆகியோர்க ளின் உதவியால் எதிர்ப்புகளை முறியடித்தேன். இவர்கள் ஆதரவு தொடர்ந்து இருந்ததால்தான் எதிர்ப்புகளை எதிர்த்து கிராமத்தில் திராவிடர் கழகத்தை நடத்த முடிந்தது.

1942ல், கிராமத்தில் பெரும்பாலும் பெண்பிள்ளை களைப் பள்ளிக்கு அனுப்பாத காலக்கட்டத்தில் முதன்முத லாக என் மகள் பூகோளத்தைப் பள்ளிக்கு அனுப்பிப் படிக்க வைத்தேன். அதனால் மறு வருடத்திலிருந்து கிராமத்தில் பெரும்பாலான குடும்பங்கள் பெண் பிள்ளைக ளைப் பள்ளிக்கு அனுப்ப முன் வந்தனர். நான் பள்ளிக்குச் செல்லவில்லை; முறையாகப் படிக்கவில்லை என்றாலும் சுயமுயற்சியால் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டேன். பெரியாருக்குப் பிறகு திராவிடர் கழகத்திலிருந்து விலகி பெரியாரின் சீர்திருத்தச் சிந்தனைகளையும், சீரிய கொள்கை களையும், பொதுவுடைமைப் பிரச்சாரத்தையும், காஞ்சிபுரத் தில் கே.எம்.பெருமாள் ஏற்பாடு செய்த பொதுக்கூட்டத்தில் திருச்சி வே.ஆனைமுத்து அவர்களின் அரிய சிந்தனைக ளைக் கேட்டு ஆய்வு செய்தபின் தோழர் ஆனைமுத்து தலைமையில் உள்ள அமைப்புதான் இந்தக் காலக்கட்டத் திற்கு மக்களை ஓர் அணியில் செயல்படுத்தும் அமைப்பாக உள்ளது என்று கருத்தில் கொண்டு, அவர்களின் தலைமை யில் உள்ள பெரியார் சம உரிமைக் கழகத்தில் 1980 ஆம் ஆண்டு முதல் இணைந்து செயல்பட்டு வருகிறேன்.

இதுவே பின்னாளில் மார்க்சிய பெரியாரியப் பொதுவு டைமைக் கட்சி எனப்பெயர் மாற்றம் செய்யப்பட்டது.

அன்று முதல் இன்றுவரை கட்சிப் பணிகளில் அதிக நாட்டங் கொண்டு கூட்டம் நடத்துவது, ஊர்வலங்களில் வந்து கலந்து கொள்ளுவது, கிராம அளவில் நிதி திரட்டி; கட்சிப் பணிக்குக் கொடுப்பது ஆகிய இலட்சியங்களுடன் இயக்க வளர்ச்சிக்காக அயராது என் எழுபத்தியாறாம் வயதிலும் பாடுபடுகின்றேன்.

நேர்காணல்: கே. ஏகாம்பரம்

# சி. ஆறுமுகம்



என் பெயர்:
சி. ஆறுமுகம்
என் பிறந்த நாள்: **15.5.1916**
பெற்றோர் பெயர்:
சின்னு செட்டியார்-
சின்னம்மாள்
பிறந்த ஊர்: மேல் செங்கம்.
செங்கம் வட்டம்

குடியிருக்கும் இடம்: செங்கம் பெருமாள் கோயில் தெரு, சம்புவராயர் மாவட்டம்.

குடும்பப் பின்னணி : ஏழ்மையான விவசாய குடும்பத்தில் பிறந்தவர் மூதாதையர் சொத்துக்கள் ஏதும் பெருமளவில் இல்லை. மூத்த சகோதரர் காங்கிரஸ் தியாகி. ஓய்வூதியத் தொகை பெறுபவர் விடுதலைப் போராட்ட வீரர்.

துணைவியார்: சுந்தராம்பாள்
ஒளிவாணன், பன்னீர்செல்வம், குறள் நெறி என மூன்று மகன்கள்.

மணிமேகலை, தமிழரசி, மதிச்செல்வி, கவியரசி என மூன்று மகள்கள்

**1939**ல் மேல்செங்கத்தில் பொதுக்கூட்டம் நடத்த பெரியாரை அழைத்து பாராட்டுப் பணமுடிப்பு அளித்தது பெரியாருடனான முதல் சந்திப்பாகும். சேலம் அ.சித்தை யன், கி. பச்சைமுத்து, இரா. நடேசன் ஆகியோருடன் **1936** முதலே தொடர்புண்டு.

**1976** முதல் பெரியார் சமஉரிமைக் கழகச் செயற்குழு உறுப்பினராகவும், தற்போது மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சியில் வடஆற்காடு மாவட்டத்தின் துணைச் செயலாளர் பொறுப்பையும் வகித்தேன்.

பள்ளிப் படிப்பைத் தொடராமல் வீட்டைவிட்டு வெளி யேறி சேலம் சென்று வெள்ளிப் பட்டறையில் வேலை

செய்தபோதெல்லாம் ஓய்வு கிடைத்தபோது ''சேலம் சுயமரியாதைச் சங்கத்தில்'' செய்தித் தாள்கள் வார மாத இதழ்கள் படிப்பது என் பொழுதுபோக்கு. நெஞ்சில் நீங்கா இடம் பெற்ற தமிழ்நாடு, சுதேசமித்திரன், குடியரசு போன்ற செய்தித்தாள்களும் அப்போது அறிமுகமாகிய தோழர்கள் சேலம் நடேசன், லைட்கடை குத்தூஸ், கி. பச்சமுத்து சாமுண்டி - பிச்சை சுப்பிரமணியம் போன்றவர்களும் என்றும் பசுமை மாறா நினைவில் நிற்பவர்கள்.

குடியரசு பத்திரிக்கையின் தலைப்பில் போடப்பட்ட ''எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு'' எனும் குறளே எனக்கு திருக்குறள் படிக்கும் ஆர்வத்தை ஊட்டியது.

1939 மேமாதம் என் வாழ்வில் மறக்க முடியாத நாள். மாபெரும் நிகழ்ச்சி (பொதுக்கூட்டம்) மேல் செங்கம் எனும் மிகச் சிறிய கிராமத்தில் நடைபெற்ற நாள். அய்யா என்று அனைவராலும் அழைக்கப்பட்ட பெரியார் ஈ.வெ. ராமசாமியை வரவழைத்து ஒரு பெரிய பொதுக்கூட்டம் நடத்தினேன். திருவண்ணாமலை தாலுக்காவிற்குப் பயணம் மேற்கொண்டிருந்த அய்யாவை அணுகி மேல்செங்கத்திற்கு வருமாறு கேட்டுக் கொண்டேன். அழைப்பை ஏற்று பெரியாரும் தண்டராம்பட்டு ரங்கசாமி ரெட்டியாரும் உடன் வந்து இருந்தார். இரவு பகலாக முயன்று திரிந்து 9 ரூபாய் நிதி திரட்டினேன். கூட்டச் செலவு போக 14 அணா (இன்று 0.88 காசு) அய்யா அவர்களுக்கு பணமுடிப்பு வழங்கினேன். அவற்றை கால் அணாக்களாக மாற்றி 46 காலணாக்கள் பணமுடிப்பு கொடுத்தேன். அதையும் மகிழ்வோடு பெரியார் ஏற்றுக்கொண்டார். என் சிந்தனையில் உருவாகிய கருத்துக்களைத் தொகுத்து சுமார் 10 வரிகளில் எழுதியதை அச்சிட்டு (சேலத்தில் அச்சிடப்பட்டது) வரவேற்பு இதழாக வாசித்து அளித்தேன். சேலம் சுயமரியாதை சங்க உறுப்பினர்களுடன் நான் கொண்டிருந்த நட்பும் பற்றும்தான் அய்யாவை அழைத்து கூட்டம் போடும் துணிவையும் ஆற்றலையும் வளர்த்தது.

சேலம் சுயமரியாதைச் சங்கத்தின் உறுப்பினராகவும் எழுத்தராகவும் இருந்தவர் தோழர் சேலம் சுப்பிரமணி. அச்சங்கத்திலேயே பணியாளாகப் பணியாற்றிய ஆதிதிராவிடப் பெண்மணி ஒருவரை கலப்பு மணம் புரிந்து

கொண்டவர். இதுபோன்ற சீர்திருத்தவாதிகளின் தலைமையில்தான் திருமணம் செய்து கொள்ளவேண்டும் என்பது என் அவா. என்னுடன் துவளாத் துணை நிற்கும் என் அன்பு மனைவி சுந்தராம்பாள் ஏற்காடு பகுதியைச் சேர்ந்தவர். என் தொழில் முன்னேற்றத்தில் நம்பிக்கை கொண்ட எனது மாமனார் வேறு உட்சாதியைச் சார்ந்தவராக இருந்தாலும் பெண் கொடுக்க இசைவு தந்தார். சேலம் சித்தையன் தலைமையில் திருமணம் நடக்கும் என நம்பி இருந்த அவர்களுக்கு சுப்பிரமணியம் தலைமையில் நடந்தது பெரும் வெறுப்பையும் ஆத்திரத்தையும் அளித்தது.

பெரியாரோடு நெருக்கமாகப் பழகுவேன் என்பதால் எங்கள் பகுதியில் நடக்கும் பொதுக்கூட்டங்களுக்கு அய்யாவை அழைத்துவர என்னையே அனுப்புவர். 1944ல் செங்கம் வட்டம் சொர்ப்பனந்தல் கிராமத்தில் இரணியன் அல்லது இணையற்ற வீரன் என்னும் பாரதிதாசன் நாடகம் நடத்த ஏற்பாடாகியிருந்தது. தலைமை ஏற்க அய்யாவை அழைத்துவரச் சென்றேன். திருவண்ணாமலை ஆவாரங்காட்டு நடேசன் வீட்டில் தங்கியிருந்த அய்யாவை பேருந்தில் அழைத்து வந்தேன். தி.மலை செங்கம் சாலையில் கோணாகுட்டை என்ற இடத்தில் மாட்டுவண்டி சகிதம் மக்கள் திரளாக அய்யாவை வரவேற்க கூடி இருந்தனர். 3 கல் தொலைவு மாட்டுவண்டியில் செல்லத் திட்டம். பெரிய ஆச்சரியம் என்னவென்றால் பேருந்தின் நடத்துனர் ஓட்டுநர் "அய்யா இறங்காதீர்கள் பேருந்திலேயே அழைத்துப் போகிறோம் என எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தி கரடுமுரடான காட்டுப் பாதையில் சென்று சொர்ப்பனந்தலில் இறக்கி விட்டனர். உங்களுக்கு ஏன் அப்பா வீண் சிரமம் என பெரியார் வினவியபோது, "நீங்கள் பெரியார் உங்களுக்கு ஏன் சிரமம்" என நினைத்தே சிரமப்பட்டு வந்தோம் என வணக்கத்துடன் விடைபெற்றனர்.

திரளான மக்கள் வெள்ளத்திடையே மேல்செங்கம் எனும் சிறிய கிராமத்தில் தந்தை பெரியார் என் தலைமையில் நடைபெற்றப் பொதுக்கூட்ட உரை வரலாற்றுச் சிறப்பு வாய்ந்ததாகும். "மேல்செங்கம் உரை" என விடுதலை இதழில் வெளியிடப்பட்டது. 1956ல் பேசப்பட்ட அய்யாவின் அந்தப் பேச்சு காலத்தின் மாற்றத்தைப் பற்றி இனஉணர்வு-கல்வி ஆகியவற்றின் தேவையைப்பற்றியது மாகும். என் நெஞ்சில் நீங்கா இடமும் எனக்குப் பெருமையைச் சேர்ப்பதுமாக அமைந்ததே அக்கூட்டம்.

தோழர் ஆனைமுத்து அவர்களின் சிந்தனையை அவர் நடத்திய குறள்முரசு, சிந்தனையாளன் போன்ற இதழ்கள் மூலமும் விடுதலை மூலமும் படித்து அவர் கருத்துகளாலும் தன்னலமற்ற பொதுநலத் தொண்டுகளாலும் அவரது செயல்பாடுகளுக்கு உற்ற துணைவனாக இருக்கவே திட்ட மிட்டு செயலாற்றி வருகிறேன். தற்போது உள்ள என் இயலாமையால் முழுமையாக பங்குகொள்ள முடியவில் லையே என ஆதங்கப்படுகிறேன். எங்கள் குடும்பத் திருமணங்கள் அனைத்தையும் தோழர் ஆனைமுத்து நடத்தி இருக்கிறார். எனது நண்பர்களும் தோழர்களும்கூட உங்கள் குடும்ப புரோகிதரா? எனக் கேட்கும் அளவிற்கு நெருக்க மாக குடும்பத் தொடர்புள்ளவர். திராவிடர் கழகத்திலிருந்து அவர் விலக்கப்பட்ட காலம் முதலாக அவரோடு தோளோடு தோள் நின்று என்னால் இயன்ற உதவிகளைச் செய்து வருபவன். பொதுத்தொண்டுக்கும் பகுத்தறிவுத் தொண்டுக் கும் என்னை முழுமையாக அர்ப்பணிக்க முடியாத நிலை யில் தோழர் ஆனைமுத்துவின் ஆக்கபூர்வமான செயல்பாடு களுக்கு துணைபுரிபவன். பெரியார் சமஉரிமைக்கழகமாய் இருந்தபோதும் மார்க்சிய பெரியாரிய பொதுவுடைமைக் கட்சியாய் மலர்ந்தபோதும் இவ்வியக்கச் செயல்பாடுக ளுக்கு உதவுகின்ற வகையில் இயக்கத் தொடர்பு கொண் டுள்ளேன்.

சிந்தனையை எண்ணத்தை துணிந்து வெளியிடும் திறன் அனைவரும் பெறவேண்டும் என்பது என் அவா! உலகம் ஒரே இனமாக மானிடநேயத்தோடு வாழவேண்டும் என்பது என் பேரவா! இன்றைய ஆட்சி அமைப்பு முறை அடியோடு ஒழியவேண்டும் உண்மையான கூட்டாட்சி வரவேண்டும் என்பதெல்லாம் என் எண்ணம். செயல்வீரர் ஆனைமுத்துவின் திட்டங்களுக்கு என் மூச்சுள்ளவரை இயன்றதைச் செய்வதே என் குறிக்கோள் என்று பெருமிதத் துடன் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

தோழமையுடன் சி.ஆறுமுகம்.

# த. வேணுகோபால்



என் பெயர்: த.வேணுகோபால் (பிறந்தநாள் - 16-11-1916) பிறந்த ஊர் தக்கோலம், (வ.ஆ) அம்பேத்கர் மாவட்டம். குடியிருக்கும் இடம் 11, பஜனை கோயில் தெரு. எனது தந்தையார் பெயர்: மு.தக்காளி ரெட்டி, தாயார் பெயர்: நயனம்மாள், எனது துணைவியார் பெயர்: பஞ்சாமிர்தம்மாள், எங்களுக்கு இரண்டு மகன்கள், ஒரு மகள். என் கல்வித் தகுதி 7ம் வகுப்பு அதற்கு மேல் எங்கள் ஊரில் அப்போது வசதி இல்லை. ஆகவே நான் தொழில் காரணமாக சென்னை சென்றிருந்த போது, தொழிலாளர்களுக்காக நடத்தப்பெற்ற இரவுப்பள்ளியில் சேர்ந்து எட்டாம் வகுப்பு படித்திருக்கிறேன். ஆனால் தேர்வு பெறவில்லை.

பெரியாருடன் முதல் சந்திப்பு 1944ம் ஆண்டில் அயன்புரம் வட்ட திராவிடர் கழகத்தை தந்தை பெரியாரைக் கொண்டே திறப்பு விழா செய்தோம். அன்று இரவு கூட்டத்தில் வட்ட தி.க. தலைவர் புலவர் ஜி.ஏழுமலை அவர்கள் தலைமையில் பெரியார் அவர்கள் பேசினார். முதல் கூட்டம் திடல் நிறைந்து வழிந்தது. அது சமயம் நான் பெரியார் அவர்களிடம் அறிமுகமானேன். அதன் பின் அவர் என்னையும் தக்கோலத்தையும் மறக்கவில்லை. ஜஸ்டிஸ் ஏ.ஆர்.செல்லப்பா அவர்களையும் மறக்கவில்லை. நான் சிறை சென்றதில்லை. போராட்டக் காலங்களில் பெரியார் அவர்கள் ஒரு நிபந்தனை வைத்தார். அதாவது தொழில் துறையில் பாதிக்கப்படுபவர்கள் போராட்டங்களிலிருந்து ஒதுங்கி இருக்கலாம் என்றதன் பேரில், எனது சகதோழர்கள் என்னை அலுவலகத்தில் இருந்து போராட்டவீரர்களை ஒழுங்குபடுத்தி அனுப்ப வேண்டுமென்று கூறினார்.

பெரியார் சம உரிமைக்கழகத்தில் மண்டல் கமிஷன் பரிந்துரையை மக்கள் சபைக்குக் கொண்டுவர மத்திய சர்க்கார் அசட்டை செய்ததால், குடியரசு நாளின் போது நமது தொண்டர்கள் அவரவர்களது இல்லத்தின் முன் கறுப்புக் கொடியை ஏற்றி வைக்க வேண்டுமென்று தலைமைக்கழகம் ஆணையின்படி, அன்று கறுப்புக் கொடி கட்டியதின் பேரில் என்னையும் கா.ந. சலநாதன். எம். துரைவேல் உள்பட ஏழு தொண்டர்கள் கைது செய்யப்பட்டு, கோர்ட்டார் அழைக்கும் போது வரவேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் விடுவிக்கப்பட்டோம்.

தற்போது மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சியில் இருந்து வருகிறேன். ஆனால் தீவிரமாக என்னால் செயல்பட முடியவில்லை. நான் சென்னையில் B. & C. ஆலையில் தொழில் செய்திருந்து எனது உடல்நிலை சரியில்லாத காரணத்தால் 1957ம் ஆண்டு எனது பணியிலிருந்து விடுவிக்கப்பட்டு தக்கோலம் சேர்ந்து அன்று முதல் கா.ந.சலநாதன் அவர்களுடன் இணைந்து சுயமரியாதை இயக்கக் கொள்கைகளை மக்கள் முன்வைத்து செயல்பட்டு வருகிறேன். இப்போது எங்களுடன் தோழர் துரைவேல் செயல்புரிந்து வருகிறார். இத்துடன் சமூகப் பணியும் செய்து கொண்டு இவ்வூர்க்கு நல்ல பலகாரியங்களும் செய்திருக்கிறேன். குறிப்பாக ஒன்றைச் சொல்ல வேண்டுமானால் 1974ம் ஆண்டு இவ்வூர் உயர்நிலைப்பள்ளிக்குப் புதிதாக ஒரு தலைமை ஆசிரியர் வந்திருந்தார். வந்தவுடனேயே அவர் சூதாட்ட கிளப் ஒன்றைத் துவக்கி இது போன்ற ஆட்டங்களில் ஈடுபாடு கொண்ட பலரை இணைத்துக் கொண்டு செயல் புரிந்து வந்தார். பள்ளியையும் தான் செய்யவேண்டிய தொழிலையும் இரண்டாம் தரமாக நினைத்துவிட்டார். அவருக்கு இரண்டு உதவி ஆசிரியர்கள் துணைபுரிந்து வந்தார்கள், பள்ளியில் நிர்வாகம் சீர்கெடவே, எனக்கு மனம் வேதனை அடைந்தது. கல்வி அதிகாரிகளுக்கு நிலைமையை விளக்கி புகார் எழுதியும், அவர்களும் உடனடியாக தலையிட்டு ஒழுங்கு செய்யவில்லை. எனவே நான் தலைமை ஆசிரியர் குறித்தும் பள்ளியின் நிலமையையும் விளக்கி 'வேதனையும் வேண்டுகோளும்' என்ற தலைப்பிட்டு அறிக்கையொன்று வெளியிட்டேன். நகரமே பரபரப்பாகிவிட்டது மாணவர்களும், நல்ல உள்ளம் படைத்த ஆசிரியர்களும் மற்றும் உள்ளவர்களும் என்னிடம் வந்து பாராட்டிச் சென்றார்கள்.

அதன் பேரில் அதிகாரி அவர்கள் தலைமை ஆசிரியர் மீது நடவடிக்கை எடுத்து பதவி இறக்கம் செய்து வேற்றூருக்கு மாற்றிவிட்டார்கள். அவரின் ஆதரவாளர்க ளான இரு ஆசிரியர்களையும் மாற்றி, வேறு தலைமை ஆசிரியர் வந்தபின் பள்ளி சீர்பட்டது. அதனால் எனக்குப் பாதிப்பு ஏற்பட்டு விட்டது. எனக்கு பட்டா கிடைக்கவேண் டிய தர்காஸ் நிலம் எனக்குக் கிடைக்காமல் தடைப்படுத்தி விட்டார்கள். அன்று கிராம முன்சீப்பாக இருந்த நபர் கிளப்பை சேர்ந்தவர் ஆனதால் என்மீது ஆத்திரப்பட்டு அவர் அதைத் தடுத்துவிட்டார். ஆனாலும் அன்று இது பற்றிக் கவலை கொள்ளவில்லை.

அடுத்து, ஒரு நிகழ்ச்சி 1975ல் நடந்தது. நான் இங்கு சிறுபிள்ளைகளுக்குக் கல்வித் தொண்டு செய்து கொண்டு வந்திருக்கிறேன். அப்போது பொங்கல் விழாவை முன் னிட்டு அரக்கோணம் ஊராட்சி ஒன்றியத் தலைவர் மாணிக்க முதலியார் அவர்கள் தலைமையில் விழாக் கொண்டாடுவ தன் மூலம் போட்டிவிளையாட்டுகளும் பகுத்தறிவுப் பாடல் களும் பாடவைத்துப் பிள்ளைகளுக்குப் பரிசுகளும் வழங்கி யிருக்கிறேன். விழா அனைவரும் பாராட்டும் வண்ணம் இருந்தது. இதைக்கண்டு பொறாமைப் பட்ட ஒரு கயவன் என்னைப்பற்றி, "நாத்திகன்; சாமி இல்லை என்பவன்; பிள்ளைகளையும் ஊரையும் கெடுத்துக் கொண்டிருக்கி றான். இவனை இங்கிருந்து விரட்டியடிக்கவேண்டும்" என்று பிதற்றிக் கொண்டும், காலிப்பயல்களை சாராயம் குடிக்கவைத்தும் என்மீது மோதவிட்டான். என்னைப் பற்றியும் எனது ஒழுக்கம் நேர்மையைப் பற்றியும் இவ்வூ ரில் அனைவருக்கும் தெரியும். ஆனால் அவனைக் கண் டிக்க ஒருவரும் வரவில்லை. ஏன், என்னுடைய சொந்த உறவினர் கூடத்தொலைவில் நின்றார்கள். தொடர்ந்து ஆறுமாத காலம் வரையில் தொல்லை கொடுத்து வந்தார்கள். எப்படியோ அவைகளைச் சமாளித்துக் கொண்டேன். ஆனால் அன்று ஏற்பட்ட அதிர்ச்சியினால் நான் நினைவு சக்தியையிழந்தேன். இத்துடன் எனது குடும்ப சிக்கலினால் மறதி அதிகமாகிவிட்டது. கூட்ட நிகழ்ச்சிகளிலும் கொள்கை களை விளக்கிப்பேச முடிவதில்லை.

என் மனவேதனையெல்லாம் மறக்கவேண்டும் என்று நினைத்து ஏதாவது எழுதிக் கொண்டிருப்போம் என்ற நினைவு வந்ததின் பேரில் ஏடெடுத்து எழுத ஆரம்பித்தேன்.

என் நினைவில் வந்தது, ''இனி நாம் வாழ முடியாது: என்ற கவிதையை ஒருவாறு எழுதி முடித்தேன். அடுத்து எனக்கு உற்சாம் ஏற்படவே நிலவே நீ சொல், செவ்வாயே உன் சேதி என்ன? மாணவர்களுக்கு அறிவுரை, ஆசிரியர் கடமை, இதுவா சோஷலிசம், உயர்ந்த மனிதன், தாழ்ந்த மனிதன், புறப்படு தோழா, பெரியாரைப் போற்றுவோம், மேலான வாழ்வு, உழவன் நிலை, மதமூடநம்பிக்கை போன்ற கவிதைகளும்; விந்தையான மனிதர்கள், இனி நாம் காண்பதெங்கே? பக்தியின் பேரால் பித்தலாட்டம் போன்ற பாடல்களுமாக சுமார் முப்பத்தைந்து பாடல்களுக் குமேல் பாடி, அதற்குப் புதுக்கவிதைகள் என்ற பெயரும் வைத்து என் புத்தக அறையில் இருக்கிறது. இதில் பிழைகள் இருக்கலாம் இவையெல்லாம் என் கொள்கைப்பிடிப்பாலும் ஆர்வத்தாலும் எழுதப்பட்டன. இதன்பிறகு என் மனவேத னைச் சுமை இறங்கிவிட்டது. இருபது வயதுக்குமேல் தான் உலக அறிஞர்களின் வரலாறுகளையும், இங்கர்சால், பகவத் சிங் போன்றவர்களின் நாத்திக வாதத்தையும் படித்துத் தெளிவு பெற்றிருக்கிறேன்.

நான் சென்னை அயன்புரத்தில் இருக்கும்போது 1955ம் ஆண்டு அயன்புரம் வட்டத்தலைவனாக இருந்திருக்கிறேன். அதுசமயம் என்னுடைய தலைமையில் பெரியாரது கொள்கை விளக்கத்தைக் கேட்டு மக்கள் பெரியார் அவர்க ளைப் புகழ்ந்தும் பெரியார் அவர்கள் துக்கநாள் என்று கூறியபோது, திரு அண்ணாதுரை அவர்கள் பகிரங்கமாக எதிர்த்து மகிழ்ச்சிநாள் என்று கூறியதை எங்கள் கழகம் கண்டித்தும் அன்று கறுப்புக் கொடி கட்டியும் கறுப்புச் சின்னங்களை அணிந்தும் நாங்கள் துக்கநாளாக அன்றைய தினத்தை அனுசரித்திருக்கிறோம். அண்ணாதுரை அவர்க ளின் கூட்டம் பெரியார் அவர்களின் திருமணச் சாக்கை வைத்துப் பிரிந்தபோதுகூட, அயன்புரம் கிளைக்கழகமா னது அதிர்ச்சி அடையவில்லை. தோழர் பி.இ. பக்தவச்சலம் அவர்கள் தலைமையில் கட்டுப்பாடாக இருந்த திரு.கே.தங் கராசு, ஏ.பி.சனார்த்தனம், எம்.கே.டி.சுப்பரமணியம், எஸ். குருசாமி, மனோரஞ்சிதம் பாவலர் அப்துல்காதர், யூசுப், எம்.ஆர்.இராதா, சாமிசிதம்பரனார், டி.சண்முகம் போன்ற பேச்சாளர்களை அழைத்து கூட்டங்கள் நடத்தி தந்தை பெரியாருக்கு மேலும் வலிவை ஊட்டியிருக்கிறோம். திரு.பி.இ.பக்தவச்சலத்தின் செயல் திறனால் தி.மு.க.வோ

மற்ற இயக்கங்களோ அயன்புரத்தில் தலைகாட்டமுடியாது போய்விட்டது. அன்று திரு.அண்ணாதுரையின் கூட்டம் வெளியேறியபின் கழகம் என்ன ஆகுமோ என்று அதிர்ச்சி யடைந்த போது, சென்னையில் திரு. பி.இ.பக்தவச்சலம் டி.சண்முகம், கே.தங்கராசு, எம்.கே.டி.சுப்பிரமணியம், கே.பஞ்சாட்சரம் மற்றும் பலரின் பேச்சுத்திறனாலும் செயல் திறனாலும் கழகம் வளர்ச்சிபெற்றுக் கொண்டே வந்தது.

பெரியார் மறைவுக்குப் பின் அதன் தலைமை திக்குத் தெரியாத காட்டில் திறனற்று நிற்பது போல், இன்று ஒரு பார்ப்பனப் பெண்ணுக்குப் பயந்து சந்தர்ப்பத்துக்குத் தகுந்தாற்போல் அறிக்கைகள் விட்டுக் கொண்டும், எதிரிகள் கேலியும் கிண்டலும் செய்ய கழகத்தை அழிவுப் பாதைக் குக் கொண்டு செல்வதை நான் நினைக்கும்போது, வேதனை யடைகிறேன். ஆகவே நான் இயக்கத் தோழர்களுக்கும், குறிப்பாக இளைஞர்களுக்கும் இந்தப் பவள விழாவின் சார்பாக நான் கூறிக்கொள்வது என்ன வென்றால், பெரு மைக்கு ஆட்பட்டு வீண் ஆடம்பரமான செயல்களைச் செய்து வறுமைக்கு ஆளாகாதீர்கள். அதே நேரத்தில் மொழிப்பற்றும் நாட்டுப்பற்றும் கொண்டு இதற்காக அயரா மல் உழைத்துவரும் தோழர் சிந்தனையாளர் ஆனைமுத்து அவர்களுக்கு உதவிக்கரம் நீட்டி அவரால் தோற்றுவிக்கப் பட்ட மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சியை மேலும் வலிவு பெறச் செய்யுங்கள் என்று வணக்கத்தோடு கூறிக் கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

வாழ்க பெரியாரிசம்!

வளர்க ஆனைமுத்துவின் சிந்தனைகள!

தகவேலம் த.வேணுகோபால்

13-5-92

# மா.ச.இராமசாமி



என் பெயர்: மா.ச. இராமசாமி
என் பிறந்தநாள்: பிங்களவ வ்ருடம் பங்குனி மாதம் 11-ம்நாள் (24-3-1918)
என் பெற்றோர்:
மா.சங்கரலிங்கம்
ஆவுடையம்மாள்
பிறந்த ஊர்:
மதுரைமாவட்டம், குலமங்கலம் கிராமம்

தற்போது மதுரை தெப்பக்குளம் அறுப்பானடி ரோடில், பாண்டியன் நகர் பனகல் தெரு 10-ம் எண்ணுள்ள இல்லத்தில் குடியிருக்கிறேன்.

குடும்பப் பின்னணி

என் தம்பி எம்.எஸ்.அன்பானந்தன், முத்தம்மாள், ரத்தினம்மாள் தங்கையர் என் வாழ்க்கைத் துணைவி காசியம்மாள்.

குழந்தைகள்

வீரமணி, அண்ணாதுரை, மதிவாணன் என மூன்று மகன்கள் கண்ணகி - மகள்

தொழில்

நானும் எனது வாழ்க்கைத் துணைவியாரும் மேலூர் வட்டம் திருவாதவூர் கோவில்பட்டியில் உள்ள பெரியார் பண்ணையைக் (விவசாயம்) கவனித்து வருகிறோம்.

கல்வி

1923-24ம் கல்வியாண்டில் நோட்டு வாங்க வசதியில் லாததால் பழைய நோட்டு பேப்பரை நோட்டாகத் தைத்துக் கொண்டு மதிய உணவுக்குப் பழையசோறு தூக்குவாளியில் கொடுப்பதை எடுத்துக் கொண்டு சுமார் 3 மைல் தினசரி நடந்து சென்று படிக்கச் சென்றேன். புத்தகங்கள் வாங்க

வசதியில்லாததால் எனது படிப்பு 6-வது வகுப்புடன் முடிந்தது.

கட்சிப்பணி

**1937** முதல தரு.அ.பழன'சசாம' அவாகளுடன இணைந்து நீதிக்கட்சி, சுயமரியாதை இயக்கப்பணியில் ஈடுபட்டேன். **1938**-ல் சுயமரியாதைச் சுடரொலி W.P.A. சௌந்திர பாண்டியனார் தொடர்பு ஏற்பட்டது.

இந்தி எதிர்ப்புப் போராட்டத்துக்கு ஆட்களைத் தயார் செய்து அனுப்பும் பணியில் ஈடுபட்டேன்.

**1938**-ம் ஆண்டு முதல் உயர்நிலைப் பள்ளி, கல்லூரி களில் சேர்ந்து கட்டணம் கட்ட இயலாத மாணவர்கள், புத்தகம் வாங்க இயலாத மாணவர்களை W.P.A. சௌந்திர பாண்டியன் அவர்களிடம் அழைத்துச் சென்று நிதி உதவி கொடுக்கச் செய்துவந்தேன்.

**1955**-ல் சௌந்திர பாண்டியனாரின் பெயரில் ''பாண்டி யன் ஏழை மாணவர் ஸ்காலர்சிப் குழு'' என்ற அமைப்பை ஏற்படுத்திச் செயலாளராக இருந்து வணிகப் பெருமக்களி டம் நிதி வசூல் செய்து ஏழை மாணவர்க்கு இலவசப் புத்தகம் வழங்கிவந்தேன்.

**1958**-ல மதுரை வந்த முதல் அமைச்சர் பாரத ரத்னா காமராசர் அவர்களையும் கல்வி அமைச்சர் மாண்புமிகு சி.சுப்பிரமணியம் அவர்களையும் நேரில் அணுகி நான் புத்தகம் வழங்கும் முறையைக் காட்டி மாணவர்களுக்கு இலவசப் புத்தகம் வழங்குமாறும், பாடப் புத்தகங்களை அரசாங்கமே வெளியிடுமாறும் வேண்டிக் கொண்டேன். அதன்படி மாணவ மாணவியர்க்கு இலவசப் பாடப்புத்தகம் வழங்க ஆணையிட்டார், பாடப்புத்தகங்களையும் அரசே வெளியிடும் முறையை அமல்படுத்தினார்.

**1944**-ல் ''மதுரை தெற்குவாசல் திராவிடர் இளைஞர் கழகம்'', ''தாளமுத்து-நடராசன் நினைவுப்படிப்பகம்'' இவற்றின் தலைவராக பணியாற்றினேன். கி.வீரமணி (மாண வர்) அவர்களை அழைத்து திறப்பு விழா நடத்தினேன் ''கறுப்புச் சட்டைப் படை'' அமைப்பாளராக இருந்து வந்தேன். ''தமிழ் மறுமலர்ச்சிக் கழகம்'' செயலாளராகப் பணியாற்றிவந்தேன். ''தமிழ்ப் பயிற்றுமொழி இயக்க''

அமைப்பாளனாக இருந்து வருகிறேன். மேலும், ''பெரி யாறு வைகை நீர்பாசன விவசாயிகள் சங்கம்'' துணைத் தலைவராக இருந்துவருகிறேன். சௌந்திரபாண்டியன் சிறப் புப் பெயரால் 'பாண்டியன் நகர்' அமைத்து அதில் பன்னீர்செல்வம் தெரு, பனகல் தெருக்கள் அமைத்தேன்.

*1945-ல்* திராவிட மாணவர் மாநில மாநாட்டைச் சிறப்பாக நடத்த ஏற்பாடு செய்தேன். மாநாட்டுக்கு திரு. எஸ்.இராமனாதன், சி.என்.அண்ணாதுரை, ஈ.வெ.கி.மி ராண்டா மற்றும் தலைவர்கள் அழைக்கப் பெற்றனர்.

**1946**-ல் மதுரையில் 'கருப்புச் சட்டைப் படை மாகாண மாநாடு' வெகு சிறப்பாக நடத்தப்பட்டது. மாநாட்டு நிதி வசூலில் தூத்துக்குடி எஸ்.நீதி மாணிக்கம் கே.வி.கே. சாமி, கோவில்பட்டி ஈ.வெ.அ. வள்ளிமுத்து, பா.இராசாமணி, ஏ.வி.பி.ஆசைத்தம்பி, அருப்புக்கோட்டை எஸ்.எஸ்.பழனி சாமி ஆகியோர் ஒத்துழைப்புத் தந்தார்கள். மாநாட்டின் சிறப்பைக் கண்ட ஆத்திகர் கூட்டம் கருப்பு உடையணிந்து கோயிலுக்குச் சென்ற சேலம் கழகத் தோழர்களைத் தாக்கினர். தாக்கப்பட்டத் தோழர்களை மீட்கச் சென்ற தோழர்களுக்கும் ஆத்திகர்களுக்கும் ஏற்பட்ட மோதலால் மாநாட்டுப் பந்தலுக்குத் தீ வைக்கும் நிலை ஏற்பட்டது.

கருப்புச் சட்டைப்படை மாநாடு முடிந்த மறுவாரம் கும்பகோணத்தில் (குடந்தை) நடைபெற்ற திராவிடர் கழக மாநாட்டில் கலந்து கொண்டேன்.

**1945**ல் திருச்சியில் நடைபெற்ற திராவிடர் கழக மாநாட்டிலும் ஈரோட்டு மாநாட்டிலும் கலந்து கொண்டேன்.

**1948**ல் தூத்துக்குடியில் நடைபெற்ற திராவிடர் கழக 18வது மாநாட்டிலும் கலந்து கொண்டேன்.

தந்தை பெரியாரின் கொள்கையான விதவைத் திரும ணம் நடைபெற வேண்டுமென்பதை அமல்படுத்தத் திட்ட மிட்டுப் பல திருமணங்களை நடத்தினேன்.

**P.T. ராஜன்**

*1938ல்* சௌந்தரபாண்டியன் அவர்களைச் சந்திக்க நீதிக்கட்சியின் முக்கியத் தலைவர் சர். பொன்னம்பல தியாகராஜன் (பி.டி. ராஜன்) வந்திருந்தார். அப்போது

பாண்டியன் அவர்கள் என்னை சர். பி.டி. ராஜன் அவர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்ததோடு 'உதவி நாடி வந்தால் உதவி செய்யுமாறும் தனக்காக வரமாட்டார்; கஷ்டப்படுகிறவர்களுக்காக வருவார்' என்றும் கூறினார்கள். அன்று முதல் சர். பி.டி. ராஜன் அவர்களோடும் தொடர்பு கொண்டு செயல்பட்டேன்.

எனது தந்தை அவர்கள் பெரியார் ஈ.வெ.ரா. அவர்கள் அறிவித்த அனைத்துப் போராட்டங்களிலும் கலந்து சிறை சென்று வந்தார். எனது சித்தப்பா இந்தி எதிர்ப்பில் ஈடுபட்டுச் சிறை சென்றார். எனது தம்பி போராட்டங்களில் ஈடுபட்டார். எனது மகன் வீரமணி ரயில் நிறுத்தப் போராட்டத்தில் ஈடுபட்டுக் கைது செய்யப்பட்டு 'மைனர்' என்ற காரணத்தால் அனுப்பி விடப்பட்டான். நான் குடும்பப் பொறுப்பில் இருந்ததால் தந்தை பெரியார் அவர்கள் அனுமதி பெற்றுப் போராட்டத்தில் கலந்து கொள்ளவில்லை.

தந்தை பெரியார் அவர்கள் மறைவுக்குப்பின் அரசுக்கும், அமைச்சர்களுக்கும், அரசியல் தலைவர்களுக்கும் கல்வி நிறுவனர்களுக்கும், தமிழறிஞர்களுக்கும் தமிழர், தமிழ்நாடு, தமிழ்மொழி முன்னேற்றத்திற்காக - அவர்களிடமிருந்து பதிலை எதிர்பாராமல் - தொடர்ந்து எழுதி வருகிறேன்.

எனது இல்லத்தில் என் பெயரில் நூலகம் ஒன்றை வைத்திருந்தேன். அதை வருங்கால தலைமுறையினர் முன்னேற்றம் கருதி மதுரை மாவட்டத் திராவிடர் கழகத் தலைவர் திரு பே. தேவசகாயம் - சின்னத்தாயம்மாள் பேரால் மேலக்கோட்டையூர் சின்னையாபுரத்தில் நடைபெறும் மேல்நிலைப் பள்ளிக்கு அன்பளிப்பாகக் கொடுத்து விட்டேன்.

தற்போது எனது இல்லத்தில் மீண்டும் நூலகம் ஆரம்பித்துப் புத்தகங்கள் வாங்கி வைத்து வருகிறேன்.

தந்தை பெரியார் அவர்களுக்குப் பின் திராவிடர் கழகம், மார்க்சிய பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சி, பகுத்தறிவு சமதர்ம இயக்கம், அறிவியக்கப் பேரவை, மற்றும் சுயமரியாதைக் கருத்துடைய இயக்கங்களுடன் தொடர்பு கொண்டுள்ளேன்.

மா.ச. இராமசாமி

கீழப்பெரம்பலூர்

# கீ.ஆ. ரங்கசாமி



என் பெயர் கி.ஆ.. ரங்கசாமி என் பெற்றோர் பெயர் ஆறுமுகம், சிவகங்கை. நான் பிறந்த ஊர் கீழப் பெரம்பலூர், பெரியார் அவர்கள் 1945ல் வேலூர் பொத்தனூர் பொதுக்கூட்டத்தில் பேசினார். அவருடைய சொற்பொழிவு என்னை மிகவும் கவர்ந்தது அதுமுதல் பெரியார் கொள்கையில் மிகவும் ஈடுபாடு கொண்டேன். அன்றிரவு “கிந்தனார்” நாடகம் நடைபெற்றது. அது நாத்திக நாடகம், என் திருமணம் சீர்திருத்த முறையில் தேவாரம், திருவாசகம் படித்து 1940ல் நடைபெற்றது.

பெரியாருடைய கருத்து சமுதாயத்தை மூடநம்பிக்கையிலிருந்து விலக்கியது. இன்று சமுதாயத்தில் ஓரளவு விழிப்புணர்ச்சி உள்ளதென்றால் அதற்கு பெரியார் அவர்களே காரணம் பெரியார் 95 ஆம் வயதுவரை அயராது உழைத்தும், இன்னும் மூடநம்பிக்கையிலிருந்தும், சாதிவேறுபாட்டினின்றும் மக்கள் மீளவில்லை.

என் தந்தையின் இறுதிச் சடங்கை (1954) பெரியாருடைய சுயமரியாதை முறையில் நடத்தினேன். என்னுடைய பகுத்தறிவுப் பணிக்கு தமிழ் மறவர் வை. பொன்னம்பலனார் உறுதுணையாக இருந்தார்.

என் பிறந்த நாள் 28-8-1912.

கீ.ஆ.ரங்கசாமி
கீழப்பெரம்பலூர்

**SRI YESES PRINT HOUSE**
*MADRAS - 600 005 PHON*[redacted]

## மகிழ்வித்து மகிழ்வோம்!
## பெருமைப்படுத்தி பெருமிதமடைவோம்!!

எண்ணற்ற பழம்பெரும் சுயமரியாதை வீரர்கள் எல்லாக் கட்சிகளிலும், அமைப்புகளி லும், இன்று உள்ளனர். இவர்கள் அனைவரும் வாழுங்காலத்திலேயே இவர்கள் நடந்து வந்த ஒற்றையடிப் பாதையை இருண்ட சாலையை எதிர்கொண்ட துன்பங்களை கண்ட சாதனை களை நிரலிட்டு ஒரு நிழற்பட காட்சிபோல் உருவாக்கி இவர்களை மகிழ்விப்பதும் இவர் கள் மகிழ்வதைக் கண்டு நாம் பெருமை கொள்வதும் தேவை.

ஒரு பலமாடி வீட்டின் உப்பரிகை நெடுந் தொலைவில் நிற்போர்க்கும் தெரியும். ஆனால் வீட்டின் கடைக்கால் - அடித்தளச் சுவர்கள் எவர்க்கும் புலப்படா. வீட்டை உருவாக்கிய வர்களை எவரும் அறிய மாட்டார். ஒரு குடும்பம், ஓர் அமைப்பு, ஒரு கட்சி இவற்றின் தன்மையும் இப்படிப்பட்டவையே.

பொதுக்கூட்ட இடத்தைத் துப்புரவு செய் வோர். பந்தர்க்காலை ஊன்றுவோர் மேடை அமைப்போர், அறிக்கை பரப்புவோர், சுவ ரொட்டி ஒட்டுவோர், போராட முன் வருவோர், எதிரிகளிடம் உதைபடுவோர், எதிரிகளைப் புறங்காண்போர், சிறை புகுவோர், இவற்றால் துன்பம் ஏற்போர், என உள்ளவர்களே ஓர் இயக்கத்தில் 100க்கு 95 பேர்.

இயக்கத்தில் பொறுப்பு வகிப்போர், மேடையேறி முழங்குவோர், எழுத்துப்பணி புரிவோர், தத்துவ ஆய்வு புரிவோர் - மிகச் சிலரே. உப்பரிகை போல் - எல்லா மக்களின் கண்களுக்கும் இவர்களே தெரிவர். இது ஓர் அவலம்; இது ஓர் அவமான நிலை. இது என் எண்ணம்.

-வே.ஆனைமுத்து